# உள்ளுறை

# அணிந்துரை

உவமைக் கவிஞர் சுரதா அவர்கள்

தொண்டு செய்தல் ஒருவனது கடமை யாகும்.
தொண்டென்னும் சிறந்தசெயல் தியாக மாகும்.
தொண்டுசெய்வோர் அனைவருமே தொண்ட ராவர்.
தொண்டர்களுள் ஒருசிலரே தலைவ ராவர்.
தொண்டுசெய்தும், அத்தொண்டைத் தொடர்ந்து செய்தும்
தூயவராய், நல்லவராய் இருப்ப தோடு,
மண்டுபுகழ்க் குரியவராய் விளங்கும் அந்த
மாமனிதர் கதர்த்தொண்டர் குப்பு சாமி!

திண்ணப்பன் என்றழைக்கப் பட்டு வந்தோன்
சிவனுக்குக் கண்கொடுத்த கார ணத்தால்
கண்ணப்பன் என்றழைக்கப் பட்டான் என்பர்.
கடலூர்வாழ் கதர்குப்பு சாமி என்பார்,
தொண்டுசெய்து வருவதனால் இவரை மக்கள்
தொண்டர்குப்பு சாமியென் றழைக்கின் றார்கள்.
அண்ணன்குப்பு சாமியென்றும், சான்றோர் பல்லோர்
அறிஞர்குப்பு சாமியென்றும் அழைக்கின் றார்கள்.

தன்னலமே இல்லாத குப்பு சாமி
தமிழர்க்குக் கிடைத்திட்ட நல்ல சாமி!
என்தலைவர் ஈரோட்டு ராம சாமி;
இவருடைய பெருந்தலைவர் காந்தி சாமி.
அன்றுமுதல் இன்றுவரை ஓய்வே யின்றி
அலைகடல்போல் இயங்கிக்கொண் டிருக்கும் சாமி!
தென்பொதிகைத் தென்றலைப்போல் சிறந்த சாமி
செல்வாக்கும் நல்வாக்கும் உடைய சாமி.

ஆரணியில் பிறந்தவொரு குப்பு சாமி
அரியபல நவீனங்கள் எழுதி, இந்தத்
தாரணியில் புகழ்பெற்றார். புரசைப் பாக்கம்
தனில்வாழ்ந்த சாமி-குப்பு சாமி யென்னும்
பேரறிஞர் தினந்தோறும் அன்ன மிட்டுப்
பெருமைபெற்றார். இன்றிந்தக் குப்பு சாமி
ஊரினுக்கும் உலகினுக்கும் தொண்டு செய்தே
ஓடியாத புகழ்பெற்று விளங்கு கின்றார்.

திருவேண்டும்; தெள்ளியராய் ஆதல் வேண்டும்;
சீர்திருத்தம் செய்தபடி இருத்தல் வேண்டும்;
ஒருநூறு தமிழர்களுக் கொருவ ரேனும்
ஓங்குபுகழ் இவரைப்போல் பெறுதல் வேண்டும்.
'அருள்வேண்டும்; அவ்வுலகம் செல்ல வேண்டும்;
அவ்விரண்டும் நான்பெறுதல் வேண்டு' மென்று
கருதாமல் தொண்டுசெய்யும் குப்பு சாமி
காவியத்தில் இடம்பெற்று வாழ்வா ராக!

✶

# வாழ்த்துரை

பேராசிரியர், முதுபெரும் புலவர்,
**உயர்திரு அ. நடேச முதலியார்**

சர்வோதயக் கதர்த் தொண்டர் நண்பர் உயர்திரு குப்புசாமி அவர்களைச் சில நாட்களுக்குமுன் ஒரு நிகழ்ச்சியில் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. தூய உடை, எளிய நடை, இனிய முகம் இவை எனக்கு மகிழ்ச்சியைத் தந்தன. சில மணித்துளிகள் உரையாடினேன். இன்சொல்லும், தெளிவும், நற்பண்பும் கண்டேன். ஊடே அவரைப்பற்றிய, அவர் எழுதிய இந் நூலைப் பற்றியும் அறிந்தேன். கருத்துரை விரும்பினார். படித்தபின் தருவதாகக் கூறினேன்: படித்தேன்; நன்று.

கால்நூற்றாண்டுக்கு மேல் சமூகத் தொண்டு செய்தும், பட்டறிந்தும் உள்ள உண்மைகளில், பல குப்பைகளில் கொட்டியுள்ளார். அவற்றைக் குண்டுமணிகளாக ஏன், வைர மணிகளாகக் கண்டேன். காண்பது அருமைதான். கண்டால் பெருமையே.

ஒருவரைப் பற்றியோ அல்லது அவரது கருத்தைப் பற்றியோ நாம் அறிய வேண்டியது ஏன்? என்ற வினா

வுக்கு விடை வேண்டும் அல்லவா? நமக்கு முன்னே அல்லது நம்மோடு வாழ்ந்தவர், வாழ்பவர் எவ்வாறு வாழ்ந்தார், வாழ்கிறார் என்பது பெரிதல்ல; அவர் சமுதாயத்துக்கு எப்படிப் பயன் பட்டார், எவ்வளவு பயன்பட்டார், பயன்படுகிறார் என்பதே அறிதலின் நோக்கம். அந்த அறிவு நம் வாழ்வை மலரச் செய்யத் துணையாகும். இந்த அளவு கருவிக்கு இந்த நூல் ஒருவாறு துணை செய்யும் என்பதுதான் என் உளமார்ந்த நம்பிக்கை.

நண்பர் திரு.குப்புசாமி அவர்கள் மேலும் தொண்டாலும், பண்பாலும், வாழ்வாலும், பல்லாண்டு பயனுடைய வாழ்வில் மலர வேண்டும் என்று எல்லாம் வல்ல முழுமுதற் பொருளை மனதார வணங்குகிறேன்.



# மணிவுரை

பேராசிரியர், டாக்டர் உயர்திரு.
T. முத்துகண்ணப்பர் M.A., Ph.D., Ex. M.L.C.,
(தலைவர், தமிழ்நாடு மீனவர் மையக் குழு)

மாணிக்கம் எங்கிருந்தாலும் மாணிக்கம்தான். அது மன்னர் முடியிலிருந்தாலும் ஜொலிக்கும்; மக்கிய குப்பையிலிருந்தாலும் ஜொலிக்கும். மாணிக்கத்தை உரிய இடத்தில் வைத்துப் பயன்படுத்திக் கொள்ளவில்லையானால், அது மாணிக்கத்தின் பிழையல்ல; பயன்படுத்தத் தவறிவிடுவோர் மதியின் பிழை.

மாணிக்கம் மன்னர் முடியில் இருந்து ஒளி காட்டுவதைவிட அது மக்கிய குப்பையில் இருந்து நினைவூட்டிக் கொண்டிருப்பதுதான் ஒரு விதத்தில் மேல். மனித சமுதாயத்தின்—ஏன் உலகத்தின்—அனைத்து ஜீவன்களின் வாழ்வும் குப்பையில்தானே இருக்கிறது! உயிர் வாழ்வதற்கு மழையைவிட முக்கியமானது குப்பைதானே?

குப்பை என்றால், வெறுங் கழிவா? நாம் உண்ணும் உணவுக்கு உணவாக இருப்பதே குப்பை அல்லவா? உணவைப் படைக்கிறது குப்பை. அது பயன்படுத்தப் பட்டுப் பின்னர்க் குப்பையாகிறது. மீண்டும் குப்பை உணவைப் படைக்கிறது. உணவு குப்பையாகிறது. இது ஓர் அதிசய வட்டம்.

மக்களினத்தில் குப்பையாகக் கருதப்படுவோர் தொழிலாளிகள், உழைப்பாளிகள், தாழ்த்தப்பட்டவர்களாகவும் வீழ்த்தப் பட்டவர்களாகவும், அடிதளத்தில் கிடந்து கொண்டு, அறிஞர்களையும், கலைஞர்களையும், ஆட்சியாளர்களையும், மாட்சியாளர்களையும் ஊட்டி வளர்த்துக் கொண்டிருக்கும் பாட்டாளி மக்கள், மேல்தளப் பெரு மக்கள் வாழவும், காணவும், களிக்கவும், எல்லா வசதிகளையும் படைத்துக் கொடுக்கிறார்கள், இந்தப் பாமர மக்கள். ஆனால் அவர்கள் என்றும் குடிசைகளிலும், குப்பைகளிலும்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள், அவர்கள் தாம் சமுதாயத்தின் தலை சிறந்த தியாகிகள்; தன்னலங் கருதாப் பேராளர்கள்; பிறர்க்கென வாழவே முனைந்து நிற்கும் அருளாளர்கள்!

எனவே, அந்தக் குப்பை மாணிக்கங்களுக்கு மாணிக்கமாய் இயங்குவது பெரும் பேறல்லவா? அவர்கள் நிலையை, தாகத்தை, உண்மைச் சொரூபத்தை உலகுக்கு விளக்கிக் கொண்டிருப்பது தான் உயர்ந்த தொண்டு. அவர்கள் முன்னேற்றப் பணியில் ஈடுபடுபவர் தாம் உயர்ந்த தொண்டர்; ஒப்பற்ற தலைவர். இது காந்திய நெறி.

ஆகவே, சகோதரர் குப்புசாமி உண்மையான குப்பை மாணிக்கம்; சரியான குப்பைச்சாமி. பெயர் பொருத்தம் சிலருக்குத்தான் சரியாக அமைகிறது. அதில் அதிர்ஷ்டம் செய்தவர் சகோதரர் குப்புசாமி. அவர் பெற்றோர் உண்மையில் தீர்க்கதரிசிகள்.

சகோதரர் குப்புசாமியை ஏறத்தாழக் கால் நூற்றாண்டாய் எனக்குத் தெரியும். அவர் என்னையறிந்திருப்பதை விட, அவரை நான் அதிகம் அறிவேன்.

அவர் சட்டப் பெருமன்றத்தில் (Madras Legislative Council) 1964—ஏப்ரல் மாதத்தில் தேர்ந்தெடுக்கபட்டிருக்க வேண்டியவர். பெருந்தலைவர் காமராஜ் என்னிடத்தில் அச் செய்தியை வெளிப்படையாகவே

சொன்னார். ஆனால் சமூகம் அவரைத் துரோகம் செய்து விட்டது.

எங்கள் சமூகம் தகுதி வாய்ந்தவர்கள் தலைவராவதை தடை செய்வதையே குறிக்கோளாய்க் கொண்டது. அது உரியவரை — உண்மையானவரை — வாழவும் வைக்காது, வாழவும் விடாது.

ஏ.வி.கே. வுக்குப் பதவி வருகிறது என்ற செய்தியை எப்படியோ அறிந்து கொண்டு தலைவரிடம் போய் 'எனக்கு', 'உனக்கு' என்று போட்டா போட்டி போடத் தொடங்கி விட்டனர்; சமூகத்தைக்காட்டியே வாழப்பிறந் திருக்கிற சில மாபெருந்தலைவர்கள்! இது பெருந்தலைவ ருக்கு பெரும் தலைவலியாய்விட்டது. வேறு வழி யில்லா மல் தென்னார்க்காடு மாவட்டத்தைச்சேர்ந்த இன்னொரு வருக்கே, மூன்றாம் முறையாக எம். எல். சி. பதவியை அளித்துத் தொல்லையை ஒழித்துவிட்டார்.

அது ஏ. வி. கே. வுக்கு இழப்பல்ல. சமூகத்துக்கே மா பெரும் இழப்பு. அதன் பலன் இந்தச் சமூகம், இன்றுவரை அரசைத் தட்டிகேட்கத் தகுந்தஆள் இல்லாமல் அநாதை யாய், அவலமடைந்து கிடக்கிறது. ஆனால் சகோதரரைப் போன்ற உண்மைத் தொண்டர்கள்-தலைவர்கள்-இன்னும் சிலர் இருந்து கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்கள் அதிகாரத்தில், அரசியல் பதவியில் இல்லாவிடினும் ஜன நாயக நாட்டின் பொறுப்பு வாய்ந்த காப்பாளர்கள், உண்மைத் தொண்டர்கள் என்ற முறையில் இந்தச் சமூ கத்தை வீழ விடமாட்டார்கள்.

சகோதரர் திரு. குப்புசாமியின் தொண்டும் பெயரும் நனி பெருகி ஓங்குக! அவரும் அவர்தம் குடும்பமும் நலம் பல பெற்றுப் பாடலீசுவரப் பெருமானின் திருவருளால் பல்லாண்டு வாழ்க என வாழ்த்துகிறேன்.



# நெஞ்சுரை

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

இனிய அன்பர், சர்வோதயத் தொண்டர் திரு ஏ.வி. குப்புசாமி அவர்களைப்பற்றியும், அவர் நாட்டுக்குத் தந்த நன்மணிகள் அடங்கியதுமான நூலைப் படிப்பதற்குரிய வாய்ப்புக் கிடைத்தது.

வாழ்க்கை, எளிமையானதன்று. அஃது ஒரு நுட்ப மான கலை. வாழ்க்கையைச் சுவையுடையதாக்கச் சதுரப் பாடு தேவை. அரசியலிலிருந்து ஆன்மீகத்துறை வரை பல ஆண்டுகள் வாழ்ந்த குப்புசாமி அவர்கள் தந்துள்ள நன்மணிகளுக்கு இருக்கின்ற ஒரே சிறப்பு, அவை குப்புசாமி அவர்களின் வாழ்வியல் அனுபவங்களின் படிப்பினைகளாக அமைந்திருப்பதேயாம். அவர் ஆழ்ந்து அகன்ற மனத்தின் அனுபவ விளைவுகளைச் சுவைபடத் தந்துள்ளார்.

தத்துவ இயலில் அவர் சிந்தனையை அகம் திருத்தும் கண்ணாடியெனக் கூறியுள்ளார். ஆம்! நேற்றைய செயலை இன்று சிந்திப்பது தானே சிந்தனை! ஆனால் ‘பாழாய்ப்போன’ இந்தச் சிந்தனை, உழுதசால் வழிச்செல் லும் எருதைப்போல் செல்லும்வழியே செல்கிறது.அதனால் சிந்தனை அகத்தைத் திருத்தும் என்ற தத்துவம் பலர் வாழ்க்கையில் உண்மையாக இல்லை. ஆனால் தத்துவம் உண்மையானது. ஏன், சிந்தனை செல்லுழிச் செல்கிறது?

அதற்குக் காரணம் சமுதாயம் என்ற பயனற்ற கதைத் திரட்சி! அஃது ஒரு போலிச் சவுக்கு; புதியன சிந்திப்ப வனை அது விரட்டுகிறது! அவன் சிரமப்பட வேண்டியதி ருக்கிறது! இதனை நமது குப்புசாமி "சிந்தனை செய்பவன் எப்பொழுதும் சிரமப்படுவான்" என்றும் கூறியுள்ளார். அருமையான வாழ்வியல் உண்மை.

அரசியலில் அருமையான சுவைக்கத்தக்க கண்டு பிடிப்புகளைக் கூறியுள்ளார். "பணக்காரன் செய்தால் சமர்த்து! ஏழை செய்தால் திருட்டு" — இது நூற்றுக்கு நூறு உண்மை! உணர்வைவிடத் தன்னலம் செழித்து வளர்ந்திருப்பதை ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். தன்னலத் தோடு மோதுபவர்களை யாரும் விட்டுவிடுவதில்லை.

ஆனால், பொதுநலத்தோடு மோதுபவர்களை விட்டு விடுகிறார்கள். ஏன், அதுதான் நிர்வாணமான தன்னலம்!

மேலும் உலகியல் தலைப்பில் மிக அருமையாகப் பல் வேறு செய்திகளைக் கூறியுள்ளார். "சாதியின் சமாதியின் மேல்தான் சமுதாயத்தின் வாழ்வு மிளிர முடியும்" என்று கூறியுள்ளார். பல நூறு ஆண்டு காலத்துத் தமிழ்ச் சிந்தனையை அழுத்தமாகக் கூறியுள்ளார். ஆனால் நடப் பது என்ன? அரசியல் இயக்கங்களும் மேட்டுக்குடி மதத் தலைவர்களும் சாதிகளைக் காப்பாற்றியே தீர்வதென்று நாளும் காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள். தொண்டர் குப்புசாமியைப் போன்றவர்கள் சாதிகளை ஒழிக்கும் பணியில் மேலும் தீவிரம் காட்டுவது பயனைத் தரும்.

இப்படியாக, சமுதாயத்தில் வாழ்ந்து கொண்டிருக் கும் அருமையான தொண்டர் குப்புசாமி அவர்களின் அனு பவங்கள், வாழும் ஆர்வமுடையவர்கள் அனைவர்க்கும் பயன்படும். தொண்டர் குப்புசாமி வாழ்க! அவர் தம் படிப்பினைகள் வளர்க.



# வாழ்வுரை

யோகிராஜ் வேதாத்திரி மகரிஷி

"உலகமோ ஒரு பெரிய பழைய பள்ளி. இதில் ஒவ்வொருவருக்கும் தினம் புதிய பாடம். பல கலைகள் கற்றோர்க்கும் பாமரர்க்கும் பகிர்ந்து தரும் இன்பம் துன்பம் எனும் பரிசு."

எவரெனினும் பிறக்கும்போது ஒன்றும் அறியாத குழந்தை. வளர வளரப் பல தரப்பட்ட குறை நலன்கள் உண்டாகின்றன. உலகில் இரண்டு பேர் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. ஏன்? ஒருவரே அவ்வப்போது சில வகையில் மாற்றம் பெற்றுக் கொண்டே வருகின்றனர். கருவமைப்பு, உறவுவகை, காலம், நாடு, கல்வி, தொழில், ஆட்சிக் கொள்கை, கலையுணர்வு, முயற்சி, பருவம், நண்பர்கள், சந்தர்ப்பம், ஆராய்ச்சி, பழக்க வழக்கம், ஒழுக்கம் என்ற பதினாறு காரணங்களால் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒருதனித் தன்மை ஏற்படுகிறது.

இந்தத் தனித் தன்மைகளைக் கொண்டு மனிதரை மூன்று வகையாகப் பிரிக்கலாம். வாழ்க்கையில் இன்ப துன்பச் சூழலிலே சிக்கித் தவித்துக்கொண்டு கரையேற வழி தெரியாமலும் கரையேற வேண்டும் என்ற ஆர்வம்கூடக் கொள்ளாமலும் இருப்போர், இன்ப துன்பச் சூழல்களில்

சிக்கினாலும் அவ்வப்போது அறிவின் கூர்மையால், விடா முயற்சியால் தன்னை விடுவித்துக் கொண்டு வாழ்வை நுகர்வோர், தனக்கு ஏற்பட்ட துன்பமாயினும் பிறர் துன்பமாயினும் கண்டபோது அத் துன்பம் உலகில் மக்களிடம் பரவாமலும் அப்படி பரவினால் அவரவர்கள் எவ்வாறு தாமே சமாளித்துக் கொண்டு வெளியேறுவது என்ற அறிவையும் செயல் முறையையும் அறிவித்துத் தொண்டாற்றுவோர் என மூவகையாகும்.

மூன்றாவது தரத்தவர்கள்தாம் என்றும் உலகமக்கள் உள்ளங்களில் நிலைத்திருப்போர், வாழும் மக்களுக்கு வழி காட்டும் ஒளி விளக்குகளாவர். திரு. A V. குப்புசாமி என்பவர் மூன்றாவது தலைப்பில் வைத்துக் கணிக்கக் கூடியவர். ஒருவர் தாம் வாழக்கையில் நடந்து பிறர்க்கு வழி காட்டுவது சிறப்பு. அவர் புகழ் உலக விரிவாகப் பரவு வதோ, ஊரோடு நிற்பதோ சந்தர்ப்பத் துணையாகும்.

எனக்குத் திரு. குப்புசாமி அவர்களைச் சென்ற ஆறு வருடங்களாகத்தான் தெரியும். அவர் எண்ணியபின் காரியமாற்றுபவர். பிறர் என்ன நினைப்பார்கள் என்று உணர்ந்து செயல் புரிபவர்.

எளிமை, அறிவின் கூர்மை, அடக்கம், நேர்மை, கடமை, பிறர் நலம், பிறர் உள்ளம் மதித்துச் செயலாற்றும் பண்பு இவற்றில் சிறந்த திரு. A. V. குப்புசாமியவர்கள் உடல் நலம், நீளாயுள், நிறை செல்வம், உயர் புகழ், மெய்ஞானம் இவற்றில் ஓங்கி அமைதியோடும், வெற்றியோடும் மகிழ்ச் சியோடும் வாழ வேண்டும் என இறைவனை நினைத்து வாழ்த்துகிறேன்.



# நன்றி

நான் சிந்திப்பதையே தொழிலாகக் கொண்ட சிந்தனையாளன் அல்லேன்.

ஆனால், நான் ஒன்றைப் பார்க்க நேரும் போது கூர்ந்து பார்க்கிறேன்; ஒன்றை எண்ண நேரும்போது ஆழமாக எண்ணுகிறேன்.

சுருக்கமாகச் சொன்னால், நான் பார்ப்பவைகளை வெறுமனே பார்ப்பதோடு விட்டு விடாமல் அவைகளைப் பற்றி எண்ணியும் பார்க்கிறேன்.

நான் கண்டவை எல்லாமும் மெய்யாகவே இருக்க வேண்டும் என்பது இல்லை.

ஆனால், நான் எப்போதும் உண்மையை அறியவே முயன்று வருகிறேன்.

எல்லாரும் என்னைப் போல் ஒவ்வொன்றையும் கவனிக்கவும் — கூர்ந்து கவனிக்கவும் — அறியவும் ஆராய்ந்தறியவும் — வேண்டும் என்று விரும்புகிறேன்.

என்பதனாலேயே, ஒரு மாதிரியாக — ஒரு தூண்டு கோலாக — இந் நூலை உங்கள்முன் கொண்டு வருகிறேன்.

தொடர்ந்து நான் சிந்தித்து வருவதால் இவ்வரிசை யில் எனது நூல்கள் தொடர்ந்து வெளி வருவது உங்களைப் போன்ற படிப்பாளிகளின் ஆர்வத்திலேயே இருக்கிறது.

இந் நூலை வெளியிடுவதில் எனக்குப் பல வழிகளிலும் அன்போடுதவிய பண்பாளர் எல்லார்க்கும் நான் எனது நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

Phone 601
43, தேரடித்தெரு,
திருப்பாதிரிப்புலியூர்.

அ. வை. குப்புசாமி
(A. V. KUPPUSAMI)



# ஓர் அகலமான மனத்தின் ஆழமான சிந்தனைகள்

காந்தத்திற்கு மட்டுந்தானா ஈர்க்கும் ஆற்றல் இருக்கிறது? காந்தத்தைப் போலவே கறுப்பானவர்; காந்தத்தைப் போலவே கவர்ந்தும் விடுபவர்.

வெள்ளைக் கதருடையில் பிள்ளையைப் போலச் சிரிக்கும் இவருடைய முகம் — ஏன், தோற்றமே — யாருடைய நெஞ்சையும் முதல் சந்திப்பிலேயே கொள்ளை கொண்டு விடக்கூடியது.

நான் இவரைத் திருப்பாதிரிப்புலியூர் தேரடித் தெரு கதர்க் கடையில்தான் பார்த்தேன்.

ஆனால், இடையில் பிரிந்திருந்தவரை மீண்டும் கண்டதுபோல் ஒரு நெருக்கத்தை இவர் என்னுள் உண்டாக்கி விட்டார்.

அறிமுகமான புதுமுகம் என்னிடத்தில் இவர் பேசிக் கொண்டிருந்தார்; நான் வாயைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

"எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தில்" — என்பது எத்துணை உண்மையானது!

மறுநாளும் சென்று பார்க்க வேண்டும்போல் இருந்தது. அவர் நினைத்திருக்கிறார்; நான் சென்று நின்றேன். மூன்று குறிப்பேடுகளைப் பெற்று வந்து படித்தபோது நான் மேலும் இந்த அறிஞரின் அகலமான மனத்தின் ஆழமான சிந்தனைகளை உணர்ந்தேன்.

காவல் துறையிலிருந்த அ. வைத்தியலிங்கனார் அவர்கட்கு நாகரத்தினம் அம்மையார் பெற்றெடுத்த திரு அ. வை. குப்புசாமி அவர்கள் உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்புவரைப் படித்தவர்.

இடைப்பட்ட ஆண்டுகளில் பார்த்தவையும் பட்டவையும் எத்தனை எத்தனையோ!

காங்கிரஸ் கட்சியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு சர்வோதயக் கதர்த் துறையில் பணியாற்றிவரும் இவரின் சிந்தனை மழைத்துளிகள் சிலவே, இங்கே தலைப்புகளில் ஆறாகப் பெருகி வருகின்றன.

தலைப்புகளில் இந்த முத்து மொழிகளைத் தொகுத்த போது உலகத்தில் தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகள் எத்தனை இருக்கின்றன என்று வியந்தேன்!

ஒவ்வொரு பொருளிலும், ஒவ்வோர் உண்மை ஒளிந்து கொண்டிருக்கிறது.

ஆமாம், உங்கள் கண்வண்டுகளுக்கு முன்னே கைத்தலத்தில் மலர்ந்திருக்கும் இஃது ஒரு சுவையான கருத்து மலர்க் களஞ்சியம்தான்.

சுவையுங்கள்; நான்கு பேருக்குச் சொல்லுங்கள்.

18, மேட்டுத்தெரு,
விருத்தாசலம்

த. பழமலய்



# காதல்

1 முனிதப் பிறவியில் உள்ள காமம் இயற்கை. இருந்தாலும் அதில் அளவுக்கு மேல் மூழ்காதே.

2 காமம் இருபாலருக்கும் பொது. இருப்பினும் பெண்ணுக்குச் சற்று அதிகம். அவள் ஆணைக் காட்டிலும் அதை அடக்கிக் கொள்வாள். ஆணைக் காட்டிலும் அதை அம்பலப் படுத்தியும் கொள்வாள்.

3 கண்டதும் (வெறும் தோற்றத்தில்) மயங்குவது காதல். நின்று காரியத்தில் நினைத்து நிதானமாய்ச் செய்வது கல்யாணம்.

4 ஆண்மகன் சாந்தமாகத் திரும்பிக்கொண்டு, பெண்களைப் பார்க்காமல் வேண்டாமென்று இருந்தாலும் இன்று பெண்கள் பார்க்காமல் போவதில்லை.

5 கலியாணம் ஆகவேண்டிய பிள்ளையும் பெண்ணும் சேர்ந்து இருத்தல் சரியல்ல. காதல் வளரினும் வளரும். அதற்கு மாறாக இருப்பினும் இருக்கும். பிரித்து வைப்பதே நலம்.

6 சிறுபெண்கள் ருது ஆகிற பக்குவத்திலுள்ள பெண்களுடன் பழகுவதினும் பையன்களிடம் பழகலாம்.

7 பெண்கள், காம உணர்ச்சியில், பையன்கள் செய்து கொள்ளும் கெட்ட காரியங்களைவிட மிகுதியாகச் செய்து கொள்கின்றனர். பல சமயம் பார்த்த உண்மை.

8 இரண்டு வயது வந்த பையன் சேர்க்கையிலும் வயதுவந்த பெண்களின் சேர்க்கை, பெண்களை அவ்வளவு ஆழ்ந்து கெடுத்துவிடும்.

9 பெண், குறிப்பால் தன் காதலை உணர்த்துவாளே அல்லாமல், செயலால் அல்ல. ஆனால், செயலால் ஆண் மகன் உணர்த்துவதையே அவள் விரும்புகிறாள்.

10 வாய்பேசாது பரிசம் உண்டாயின் அவள் தன்னையே மறந்து அதில் ஆழ்ந்து தவிப்பாள். என்னே காதல்!

11 குவிந்த ஸ்தனங்கள் மிக்கக் காமத்தைக் கிளரும் தன்மையன. அதுவும் ஒடிந்து விடும் கொடி போலிருப்ப வளுக்கு.

12 உதடுகளைச் சுழித்துக் கொண்டு சிரிப்பது, பேசு வது, குறுகிய வட்ட வாயுடைய பெண் உள்ளம், காமக் கனல்.

13 பெண்கள் முன்னிலையில் ஆடவர்களை நிர்வாண மாக நிற்க வைத்து காதலர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள் என்றால் 98 விழுக்காடு ஆண் குறியைப் பார்த்துப் பொருக்குவார்கள். அதே போல் ஆடவர்களை தேர்ந்தெடுத்துக் கொள்ளச் சொன்னால் 98 அழகிகளைத் தான் விரும்புவார்கள். காரணம், பெண் மகளுக்குக் காமம் அதிகம். ஆண் மகனுக்குக் காதல் அதிகம்.

14 ஆண்கள் மல ஜலம் கழிக்குமிடத்திலேயே பெண் கள் மலஜல கழிக்குமிடம் அமைக்கப்படுகிறது. இயற்கை

யிலும் அமைந்திருக்கிறது. தோட்டம், குளம் - இயற்கை. கக்கூஸ் — செயற்கை காரணம், ஒன்றை ஒன்று ஈர்க்கும். எதிர் திக்குகள் சேர்வது போன்றது.

15 பெண்ணையும், ஆணையும் பார்வையில் பிரித்துக் காட்டுவது கொங்கை. ஆகையால் கொங்கையில்லையேல் மங்கை ஆகாள்; கண்கள் கொங்கையைக் காணும். கைகள் அதை நாடும். மார்பு அதைத் தேடும். இதனால் உடலே ஆடும்! ஆடும் மங்கையர் கொங்கை மனிதனை ஆட்டும்!

16 பூ ஆகர்ஷ்ண சக்தியை யாவும் எதிர்க்கத்தான் நினைக்கின்றன. இது கடைசி வரை முடிவதில்லை. இது காதலுக்கும் பொருந்தும். எதிர்க்க நினைப்பதும் இயற்கை; ஈர்க்கப் படுவதும் இயற்கை.

17 உண்மைக் காதலில் ஆண்கள் சாகும்வரை, தான் காதலித்தவளை மறப்பதில்லை.

18 பெண்மை, சுலபமாய் அன்பைப் பெறும்; அதை விடச் சுலபமாய் அதை இழந்தும் கொள்ளும்,

19 ஆண் மகன் கண்டு காதல் கொள்ளும் ஆண் மகனே அழகன். பெண் மகள் கண்டு காதல் கொள்ளும் பெண் மகள் இல்லை. பொறாமை மிகும்.

20 பிள்ளையை வைத்துக் கொண்டு வாலிபனைப் பார்த்துப் பார்த்துப் பிள்ளையிடம் கொஞ்சுவதும் பேசுவதும் விளையாடுவதும் அவள் வாலிபனைக் காதலிக்கும் குறி.

ஆண்மகன் பார்த்திருக்கையில் அவள் அவனை அடிக்கடி பார்ப்பதும் காதலின் அடையாளம்.

அதிக தூரம் சென்று கொண்டிருக்கையில் கூடப் பல தடவை திரும்பிப் பார்ப்பதும் காதல் நோக்கே.

காரணமின்றிப் பேச்சுப் பேசுகையில் ஆண்மகன் காதில் விழத் தன் ஊர் 'பேர்' விலாசம் சொல்வாள். மறைமுகமாய்க் காதலனை வரச்சொல்லும் வழி.

21 பிரம்மம் உலகில் உண்டாக்கியுள்ள மாயை பெண்மையே.

22 அனேகப் பெண்களை உணர்ச்சி எழச்செய்யும் பேச்சாலும் நடிப்பாலும் ஏமாற்றி விடலாம்.

23 காதலைப் புரிந்து கொள்ளப் பாஷைகளைப் புரிந்து கொள்ளத் தேவையில்லை. கவலை, கோபம், இன்பம், துன்பம், வெட்கம் இவை யாவற்றிற்கும் எல்லா மனித இனத்திலும் ஒரே செயல்தான். பாஷை தெரிந்து கொள்ள வேண்டியதில்லை.

24 அனேகமாக ஆண்கள் தான் பெண்களிடம் முதலில் காதலை வெளிப்படுத்த வேண்டும். இதில் சில சமயம் இடர்களும் நேரிடும். பெண்கள் முதலில் வெளிப்படுத்துவது அரிது.

25 தன் மனத்திற்குப் பிடித்த ஆடவனிடம் எவ்வளவு காவலுக்கிடையே இருந்தாலும் ஒரு பெண் தன் விருப்பத்தைப் பார்வையால், சிரிப்பால், உணர்த்தி விடுவாள். இச் செய்கைகளை இரு உள்ளங்கள் தான் உணரும்.

26 வாலிபன் குமரியை அனுபவித்த பின் கிழவியை நாடமாட்டான்! ஆனால் குமரிப்பெண் வயதானவனை நாடுவாள்.

27 வாலிபம், இளமை, அழகு யாவும் நிலையற்றவை. அதனால்தான் மனிதன் அதை வேகமாக அனுபவித்து விட எண்ணுகிறான்.

28 அழகாக இல்லாதவர்கள் பிறரை [மாற்று ஜாதியை அல்லது பாலை] அதிகம் பார்த்து அவர்களின் வெறுப்பைத் தேடிக் கொள்ளக் கூடாது.

அழகாக உள்ளவர்கள் பார்த்தால், அன்பைப் பெறாவிட்டாலும், அதிகக் கசப்பு ஏற்படாது.

29 ஆண், காமத்தைக் கவுரவத்திற்காக அடக்கிக் கொள்வான். பெண் காமத்தை அடக்கியும் கொள்வாள், அதை அம்பலப் படுத்தியும் கொள்வாள்.

30 இரு பாலருக்கும் காம எண்ணத்துடன் பரிசம் பட்டால் காம காந்த சக்தி உண்டாகிறது, விந்து கூட வெளியாகி விடுகிறது. என்ன சக்தி! கால் பாதத்தில் விரல்களில் இந்த உணர்ச்சி சற்று அதிகம் போலும்!

31 உண்மை அன்பின் வலிமை மிகவும் சக்தி வாய்ந்தது.

32 ஆண், பெண் பார்த்து ஆசைப்படுகின்றனர். இச்சை பூர்த்தி செய்ய முடியாத கட்டுப்பாடு. மனித இனத்திற்கே சுதந்திரமில்லை. ஏனைய உயிர்கட்குச் சுதந்திரம் உண்டு.

33 ஒரு பெண், தன் கால் பெருவிரலால் நிலம் வருடித் தன் கைவிரலால் தலை நெருடினால் தன்னைப் பாதம் முதல் சிரம் வரை எதிரில் உள்ளவனுக்கு ஒப்படைப்பதாகவே கொள்ளலாம்.

34 அழகிய பெண் முகத்தை ரசித்துக் கொண்டிருப்கையில் அவளின் தலைமுடி ஒன்று அவள் முகத்தை மறைப்பதைக் கூடச் சகிக்க முடியவில்லை, ரசிகனுக்கு!

35 பெண்களின் கைப் பெருவிரல் அமைப்புக்கேற்ப அல்குல் நீள அகல அமைப்பு; ஆண்கள் கால் பெருவிரலுக்கு ஏற்ப ஆண்குறி நீள, பருமன் அமைப்பு.

36 ஆண்களின் எண்ணங்களை விடப் பெண்களின் எண்ணங்கள் அதிகம். அவர்கள் அணியும் வண்ணங்கள் நிறைந்த சேலைகளில் தெரிகிறது, இது.

37 ஒரு பெண் ஒருவனை மோகித்தால் அவன் முன் அவளால் நிமிர்ந்து நிற்க இயலாது. எதையாவது பற்று வாள்; துவளுவாள். இவன் தாங்க வேண்டும்!

38 மெல்லியவளே போகத்திற்கு உகந்த முதல் தரம். கட்டான சமனான பெண்கள் இரண்டாந்தரம். தடித்த பெண்கள் தகுதியே அற்றவர்கள், புரிந்த ஆடவர்கட்கு.

39 ஒருவன் ஒருத்தியைக் காமுறுகிறான். என்ன ஆகும்? குழப்பம்!

40 காதல் இருட்டு; கல்யாணம் வெளிச்சம். ஆண்கள் வெகுளியாயின் சொத்து பறிபோகும். பெண்கள் வெகுளி யாயின் கற்பு பறிபோகும்,

காம வயப்பட்டவனுக்குத் தனிமையில் யாரும் அழகு தான்.

41 ஆண் ஒருத்தியோடு வந்து விடுவான்! பெண் ஒருவ னோடு ஓடி விடுவாள்!

42 கிழவனுக்குக் குமரியும் — கிழவிக்குக் குமரனும், இதிலும் ஒரு இன்பம்! குறிப்பாகக் கிழவன் சிழவிக்குத்தான்!

43 பெண்களின் உண்மை அழகைக் காணத் தகுந்த நேரங்கள்; குளித்து முழுகிய பிறகு, அதிகாலை துயில் எழுந்த உடன், சாவு வீட்டின் துக்க சமயம்.

44 சில மங்கையரின் கொங்கைகள் நடக்கும் போது அதிர்வது ஆண்களைக் காம அதிர்வில் ஆழ்த்தும்!

45 எல்லாப் பெண்களும் தங்களது கொங்கையைப் பார்த்துக் கொள்வார்கள், மகிழ்ந்தும் கொள்வார்கள்.

பெண்கட்கு முலை அழகு இல்லையேல், முக அழகு தேவை.

46 காம விகாரம் என்பது சரியானதே. விகாரமானது காமம்; காமம் விகாரமானது.

47 கொங்கை முன்னே! மங்கை பின்னே! மங்கை முன் கொங்கை செல்கிறது!

48 கைம் பெண் காதல் ஒரு ஐம்பொன். இளம் பெண்ணைக் காதலிப்பது ஒரு செம்பொன்.

49 நினைத்தால் காதல் எரிகிறது!

அணைத்தால் காதல் அணைகிறது!

50 அசிங்கமாக இருக்கும் பெண்கள் அழகிய ஆண்களையும், விகாரமாக இருக்கும் ஆண்கள் அழகியபெண்களையும் பார்த்து ஆசைப்படுவது தவறில்லை. அவர்களின் உள்ளங்கள் அழகானதே. ஒன்றே போல் உள்ளதே. நோக்குவது உயிர்தானே! ஆசைப்படுவதும் உயிர் தானே!



# இல்லறம்

1 கல்யாணம் மனிதனை மாய்க்கும் மருந்து; ஆனால் அது இல்லையேல் பலம் இல்லை. வாழ்க்கை இல்லை.

2 கலியாண் நாள், இன்பம் அனுபவிக்கும் நாள் துன்பம் தொடரும் நாள். வாழ்க்கையில் கலியாணம் மனிதனை மாய்க்கும் சடங்கு.

3 என் தாய்க்கும் தாரத்திற்கும் பித்தவாத சுரம் கண்டு தடுமாறும் நிலை பல தடவை அடைந்தனர். பதறினேன் இல்லை. இருப்பினும் சேய்களை நினைத்தேன். தாயற்றவை ஆகும் எனக் கலங்கினேன். சேயைப் பாது காக்க விரும்புவன் கட்டாயம், கண்டிப்பாய் மறு கலியாணம் செய்து கொள்ளக் கூடாது.

4 பிள்ளை சில சமயம் மிகச் சள்ளையாய் இருக்கும்; அது இல்லையேல் உன்னை உணர்த்த உனக்குப் பின் ஆளில்லை. ஒவ்வொரு சாமான்ய மனிதனும் தன் ஆயுள் மாறிய பின் தன் பெயர் இருக்க வேண்டும் என்று நினைக்கிறான். அதிக நன்மை செய்து நற்பெயரில்லாவிடினும் பிள்ளையினால் சிலகாலம் பெயர் இருக்கும். எனவே பிள்ளைப்பேறு அவசியம்.

5 மன ஒருமைக்குப்பின் போகம் மிக்க வீரியமாய் இருக்கும்.

6 லீலைப்படி பெண் மேலிருந்து போகிப்பது பெண்ணிற்கு அதிக இச்சையைப் பூர்த்தி செய்யும். ஆனால் ஆண் மகனுக்கு நரம்பு மண்டலங்கள் கெடாமல் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஆணுக்கு எப்படியும் அது தீங்கே.

7 காமமோ கண்ணற்றது. காமத்தை அனுபவிக்க மிக்க அமைதி வேண்டும். இல்லையேல், காமம் சாமமாகும்.

8 உலகில் மாமியை மெச்சும் மருமகள் இல்லை. மருமகளை நல்லவளென்னும் மாமியும் இல்லை. இப் பழமொழி, மிக உணர்ந்து சொன்னது.

9 பிள்ளைகளிடம் அன்பு காட்டு, உள்ளன்பு காட்டு, கடிந்து கண்டி வெளிக்கு. காரணம், அன்பால் வருங் காலத்தை நீ வருந்திக் கழிக்க நேரிடும்.

10 கலியாணம் செய்த குடும்பங்களில் சண்டை சாந்தி — கலியாணமான காலையில் வீட்டுப் பெண் சாணி போடத் தாமதமாவதிலிருந்து இதை ஆண்மகன் காப்பாற்ற வேண்டும். ஆனால், புது மணமக்களுக்கு இது இயலாது. இதுதான் இயற்கை.

11 லீலைப்படி அனுபவிப்பதில் பெண்கட்குத்தான் அதிக இன்பம். நமக்கும்தான். நாம் உணர்வதில்லை. ஆதலின் பெண்மைக்கே ரசிக்கும் தன்மை அதிகம். நம்மிலும் இவ்விடயத்தில்.

12 முலைக்காம்புகள் இரு உள்ளங்கையில் படும்படி பிடிப்பதே இன்பம். அவை இரண்டு நுனிகளும் ஆண்களின் இரு முலைக்கண் நுனியுடன் சேரும்பொழுது ஒரு மின்சார அல்லது காந்த இன்பம் தோன்றும்.

13 யோனியைக் கவ்வுவதில் இரு பாலருக்கும் ஒரு தனி இன்பம் தோன்றும். அதிலும் பெண்ணுக்கு இது பெரு மிதம்.

14 இந்தப் போகம் 'கரு', 'இல்லை', என்பதை இரு வரும் உணருவதே போகம்.

15 முத்தம் என்றாலே ஒரு முத்துச் சொல்போல் விளங்குவது.

முத்தம் எல்லோருக்கும் எல்லாராலும் எல்லாவிடங் களிலும் எல்லாப் பொழுதிலும் வழங்கப்படுவது இல்லை.

முத்தம் கொடுத்து விட்டால் வாய் பேசாது. இது முதிர்ந்த அன்பு.

இந்த முத்தங்களில் நாவோடு நாவை மாறி மாறி ரசித்து எச்சிலை [தேனை] ருசித்து அனுபவித்து முத்தமிடு வது சிறந்த நன்முத்து என்கின்றேன்.

16 பெண் குறியில் ஒரு இடத்தில் ஆண் குறிபடும் பொழுது நம்மை அறியாமல் இன்பம் அடைகிறோம். அதைத்தான் பெண் அறிந்து இன்பம் அடைகிறாள்.

17 'பெண் சிரித்தால் போச்சு' என்கின்றனர். உண்மை பகிரங்கமாகச் சிரித்தால் அல்ல. ஒரு ஆண்மகனிடம் பதி லுக்குப் பதில் அல்லது அவனைச் சிரிக்க வைக்கச் சிரிப்பது. சொல்கிறபடி கேட்டலினும் செய்கிறபடி செய்தால்தானே மிகப் பக்குவவழி. இதில் ஆண்மகன் சுற்றுப்புறச் சூழ்நிலை யைப் பார்த்து நடந்து செயலில் இறங்க வேண்டும். இல்லையேல் அவள் சிரிப்பு உனக்கு எரிப்பாய் முடியும்.

18 உணர் பின் புணர்; மோகி பின் போகி; போகி பின் யோகி.

19 புறக்காதல் லீலையிலும் அகக் காதல் லீலை மிகக் கொடிது. இரண்டும் கலந்த கலவியே உண்மைக் காதல்.

20 மனிதன் ஒருவன்தான் தன் பிள்ளைகள் தனக்குக் கைமாறாகச் சோறு போட்டுக் காப்பாற்ற வேண்டுமென நினைக்கிறான். மற்ற எல்லா இயற்கை உயிர்களும் தன் பிள்ளைகளைக் கைமாறின்றிக் கடமை என்றே வளர்க்கின்றன.

21 பருமனான பெண் பலருக்கு நீளம் தேவை, காரணம், சதை கனம் அதிகம்.

22 ஏழை மகனுக்கும் தந்தைக்கும், மனைவிக்கும், புருஷனுக்கும் இயற்கை ஜீவன்களைப் போல் சுதந்திரம், சமத்துவம் உண்டு. பணக்கார குடும்பத்தில் இரண்டும் இல்லை.

23 மோகத்துடன், வேகமின்றிப் போகிக்க வேண்டும். கர்ப்ப சமயம் நிதானமாய் இருப்பின் இன்பம் அதிகம்.

24 பெண்டாட்டி துன்பம். வைப்பாட்டி இன்பம். இப்படித் தோன்றும்!

25 நாம் சாகும் வரை நமக்கு ஆண், பெண் இரு குழந்தை பிறந்து, அவை வாழ்ந்து இருந்தால் போதும்.

26 சிறு குழந்தைகளின் மர்ம ஸ்தனங்களில் கை. ஸ்பரிசம் செய்தல் கூடாது.

27 பணம் எவ்வளவு இருப்பினும் போதும் என நினையான். பிள்ளைகள் அதிகமாயின் போதுமென்பான்.

28 பெண்களை ஆண்கள் பல விஷயங்களில் கேட்டுச் செய்கின்றனர். ஆனால், போகத்தில் அப்படி செய்வ

தில்லை. ஆண்கள் இதில்தான் அவசியம் கேட்டுச் செய்ய வேண்டும்.

29 சில நாகரிக வீடுகளின் அமைப்பு சீர்திருத்திய சிறைபோன்றிருக்கிறது.

30 மதியம் சாப்பாட்டுக்குப் பின் 1 மணிமுதல் 3 வரை ஒரு வித சோம்பலான காம எண்ணம் ஏற்படக் கூடும்.

31 புண்ணே பெண்; அதற்குச் சான்று தாய்மையே.

32 கண்ணைக் காப்பது போல் பெண்ணைக் காக்க வேண்டும். காரணம், அவ்வளவு சீக்கிரம் கெடக்கூடியது.

33 சீதேவியும், மூதேவியும், பெண்மையில்; அதனால் தான் பெண் சிறப்பும், பெண் பேய்மையும் என்கிறேன்.

34 பிள்ளை நல்ல பிள்ளையாய் வளராது இருப்பின், பிள்ளை பெறும் போது இருந்த மகிழ்ச்சியைவிட இகழ்ச்சி அதிகம்.

35 பிள்ளைகள் பெருகப் பெருகப் பெற்றோர்கட்கு மகிழ்ச்சிதான், ஆனால், பொறுப்புணர்ச்சியும் தியாகமும் அதே சமயம் வளர வேண்டும்.

36 பெண்களில் பலர் ஆண்மகனுக்கு அடக்கமான பெண்சாதியாய் இருப்பதைவிட ஆண்களின் வைப்பாட்டிகளாக இருப்பதையே விரும்புகிறார்கள். காரணம், கட்டுப்பாட்டை வெறுக்கின்றனர்.

37 மனிதனை விடப் பல ஜீவராசிகள் அதிக நேரம் போகிக்கின்றன.

38 பெரும்பாலான பெண்கள் வயதான பின்னும் தங்களை ஆடவர்கள் பார்க்க வேண்டும், அழகி என நினைக்க வேண்டும் என எண்ணுகிறார்கள். காம எண்ணமல்ல.

39 சூரியனை நெற்றிக் கண்ணால் பார்த்துத் தரிசித்து வந்தால் குழந்தை சிகப்பாகப் பிறக்கும்..

40 என் மனைவி நகை கேட்டாள். பதில் சொன்னேன்: "பொன் நகை உனக்குப் பகை. காந்திஜி மனைவியைப் பார்; என் புன்னகையே உன் வாழ்க்கைக்கு உவகை".

41 பெண்ணின் முகத்தைப் பார்த்து அவள் மர்ம ஸ்தானத்தையும், அவள் போகத்தை எப்படிச் சுவைப் பாள் என்பதையும் சொல்லலாம்.

42 குடும்பம் நடத்த சுதந்திரம் தராத பெற்றோர் களிடம் வாழ்வதைவிடத் தனிக்குடும்பம் செய்வதே முறை.

43 பெண்கள் நெருங்கிய சிறு பூக்களையுடைய கலர் சேலைகளை அணிவது ஒரு விதத்தில் நல்லது.

44 பல பெற்றோர்கள் பிள்ளைகளை அன்பாய் வளர்க்கின்றனர். பிள்ளைகளை மரப்பொம்மைகள் போன்று நினைக்கின்றனர். அவர்களின் இன்பத்திற்காகப் பிள்ளைகள் என நினைக்கின்றனர். பெரிய பிள்ளைகளை தமக்கு விசை முடுக்கி ஓட்டும் இயந்திரங்களாக இருக்க வேண்டும் என நினைக்கின்றனர். தானே இயங்கின் தகராறுதான். இவர்களின் ஆசை அளவுடையதாயின் இந்நிலை ஏற்படாது. பிள்ளைகள் விளையாட்டுக் கருவி கள் அல்ல என்பதைப் பெற்றோர்கள் உணர வேண்டும்.

45 '60' ஆம் கல்யாணம் செய்வதைவிட ஏழை ஒருவ னுக்கு '20' ம் கலியாணம் செய்து வைத்தால் கோடி புண்ணியம் உண்டு.

46 நான் என் பிள்ளைகளுடன் உற்ற தோழனைப் போல் நடந்து கொள்ள விரும்புகிறேன்.

47 பிள்ளைகள், பெற்றோர்கட்குக் கொடுக்கும் தொல்லையைப் பெற்றோர்கள், வயதானதும் பிள்ளைகட்குத் தொல்லை கொடுத்தே தீர்க்கிறார்கள்.

48 எல்லாவற்றையும் திருப்தி செய்ய முடிந்தாலும் முடியும். ஒரே ஒரு பெண்ணைத் திருப்தி செய்ய முடியவே முடியாது.

49 ஆவதும், அழிவதும் அவனியில் பெண்களாலே தான். ஆண்கள் பெண்களின் உபகரணங்களே: உதாரணம் தேனீ வாழ்க்கை ராணி ஈ ஒன்றுக்கே உரிமை. இவ்வளவு கொடும் பெண்ணின் இனிமை தேவையில்லை என்று வெறுக்கும் பிரம்மசாரிக்குத் தான் உலகம் அடிமை. பெண்மை இனிமையாகவும், கொடுமையாகவும் ஆட்சி செய்கிறது. அதைத் தான் சுதந்திரமாக வாழ எதிர்க்கிறவனே பிரம்மச்சாரி.

50 உள்ளக் காதலே இல்லை. எல்லாம் உடற் காதல் தான்.

51 என் குழந்தைகள் என் பக்கங்களில் படுத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருப்பதை நான் மிகவும் விரும்புகிறேன்.

52 ஒரு மாதத்தில் ஒரு முறையாகிலும் போதுமென்று சொல்லும் அளவு இன்பம் நுகர்ந்தால் தான் அவள், அவனை விரும்புவாள். அப்படி அவனால் திருப்தி செய்ய இயலாவிடில் அவன், அவளுக்கு வேலைக்காரனே!

53 மாமி, தன் மகளைப்போல் மருமகளையும் நினைத்தால் போதும்.

54 சொந்த தாய் தந்தையிடம் அன்பு காட்ட, மரியாதை காட்டத் தெரியாதவனுக்குப் பிறரிடம் நடந்து கொள்ளவே தெரியாது.

55 தன் பெற்றோர்களை விடத் தான் உயர்ந்தவன் என்று எண்ணிக் கொண்டிருப்பவனின் வாழ்க்கை பூராவும் சிக்கலானதே.

56 சிறு குழந்தைகள் பொம்மைகளை உடைப்பதற்காக நாம் அவர்களின் உள்ளங்களை உடைக்கலாகாது.

57 குடும்பஸ்தனக்கு டம்பம் உதவாது.

58 மனிதன் கலியாண மென்கின்ற ஒரு தவறு செய்தாலே போதும். எல்லாத் தவறுகளும் தானே நடக்கும்.

59 கொடிய கோபம் அதிகார ஆசை தந்தை. முன் கோபம் முழு மூடத் தாய். கணவன் கருத்தறியாத கடுஞ்சின அறிவில்லா மனைவி. சொற்படி நடவாப் பிள்ளைகள். இதில் முழு மூடன், நான் வாழ்கிறேன்.

60 குழந்தையின் தசையில் ஒரு மிருதுவும் மேனியும் அன்பை உண்டு பண்ணுகிறது. யவ்வனப் பருவ வயதில் ஒரு பார்வையும் தளதளப்பும் அன்பை உண்டு பண்ணுகிறது. இரண்டு அன்பிலும் பேதம் இருக்கிறது.

61 தாம்பத்ய உறவுகூடப் பெண்ணுக்கு ஆண்தான் கொடுக்கிறான். இவன் உழைப்பில்தான் அவளுக்கு இன்பம் அதனால், அவள் இவனைப் யாதுகாக்கிறாள். இவன் அவளைப் பாதுகாத்து நேசிப்பது, அவளிடம் இன்பம் இருப்பதாக இவன் நினைக்கு ரமையால்தான்.

62 ஆண்மகனுக்கு வெளியில் பல ஜோலி, பலமுயற்சி, சிந்தனை, பயம், வீரம், ஆவேசம். அதனால், அவன் காதலை [தாம்பத்ய உறவை] மறக்கலாம். பெண்கட்கு வீட்டு வேலை. நல்ல பெண்ணுக்குக் கணவனைப் பற்றிய சிந்தனை. ஆகையால், இந்த எண்ணம் பெண்கட்கே அதிகம் எனத் தோன்றுகிறது.

63 தாயின் தகைமைக்கு ஏற்பத்தான் பிள்ளைகளின் பழக்க வழக்கப் பண்பு அமையும்.

64 ஒரு பெண்ணின் விருப்பத்தை அவளே திருப்தி என்று எண்ணினாலொழிய வேறு யாராலும் திருப்தி செய்ய முடியாது.

65 தந்தை தன் மகனுக்கு மதிப்புக் கொடுப்பதைக் கொண்டுதான் மகன் நிலை உயரும்.

66 மனைவி, புருஷனைப் பாதுகாத்துப் பேணிப் பணிவதைப் பொருத்தே, பிள்ளைகளிடம் தந்தையைப் பற்றிய மதிப்பு வளர்கிறது,

67 வயது கிரமத்திற்கு ஏற்ப வரையறை, முறை யுடன் வாழா வாழ்க்கை வாழ்க்கையல்ல.

68 கலியாணம் செய்து வைப்பதைவிட ஒரு பாப மான காரியம் வேறெதும் இல்லை. இது அதன் சிரமங் களை உணர்ந்தவர்களும், உணராதவர்களும் சேர்ந்து செய்கின்ற ஒரு கொடுமை.

69 ஊரைக் கண்டு ஓடி அலைகிறவன் ஆண். உட்கார்ந்த இடத்தில் இருந்து கொண்டு முன்னேற நினைந்து ஒட்டுவிக்கிறவள் பெண்.

70 கற்பு பெண்ணிற்கு மட்டும் ஏன் வலியுறுத்தப் படுகிறது என்றால், (என்னை ஒரு நண்பர் கேட்டார்) பெண்பால் கற்புக் காத்தால், ஆண்பால் தானே கற்புடைமை பெறும் என்பதால்தான்.

71 பிள்ளைகளை வளர்த்தல் என்றால், அவைகளின் குணங்களை வளர்த்தல், உடலை அல்ல. உடல் தானே வளர்கிறது.

72 மிகவும் வறுமையான குடும்பத்தில் பிறந்து வளர்ந்த சகோதரர்களிடம் மிகுந்த அன்பு இருக்கும்.

73 மாதர்கள் சிறுநீர் கழிக்கையில் ஏதேனும் ஒன்றைப் பார்த்துக் கொண்டு இருப்பார்கள். அல்லது கையால் தலையை நெருடிக் கொண்டு இருப்பார்கள்.

74 கவுரவமாக குடும்பம் செய்வது பெரும் கஷ்டம். மிகவும் பயந்து நடக்க வேண்டும். குடும்பத்தில் உள்ள பெரியவர்கள், சிறுவர்கள், ஊரில் உள்ளவர்கள் அனைவருக்கும் பயந்து வாழ்ந்தால்தான் கவுரமாக வாழ முடியும்.

75 பறவைகள், மிருகங்கள் கூடத் தாய் தந்தையர்களின் சாயலில் பிறக்கின்றன. 'விதை ஒன்று போட்டால் சுரை ஒன்றா முளைக்கும்?' என்கிறார்கள்.

76 பெண்களைக் கெடுப்பது, கெட்ட பழக்கங்களுக்கு ஆளாக்குவது ஆண்கள்தான்.

77 வயதான பெண்கள் ஒதுங்குவதே வாலிபர்கட்கு உதவி.

78 வயதாக, வயதாகக் காமம் குறைகிறது என்பதல்ல. காம எழுச்சி, நிகழ்ச்சி குறையலாம். காம எண்ணமும் வளர்ச்சியுற்று வயதில் வளரும் போலும்!

79 காம லீலையின் உச்சிக்குச் சென்றவனுக்கு எல்லாம் ஒன்றுதான். அவன் காம வேட்கையில் தேனில் விழுந்த ஈ போல் மயங்கி மங்கி விடுகிறான். இது இருபாலருக்கும் பொருந்துவது.

80 காம உச்சியிலிருந்து காமத்தைத் துறப்பவனுக்குக் கடவுளைக் காண்பது எளிது. ஆனால், அதில் அவன் கவனம் செலுத்துவதில்லை.

81 குழந்தைகள் மேனி பட்டுப் போன்ற வழுவழுப் பாயும் மிருதுவாயும் இருக்கிறது. தலை மயிரும் என்ன மிருது! பட்டு, பஞ்சு போன்று உள்ளது!

82 பெற்று, நோய் நொடி காத்துச் சீராக்கி வளர்த்துப் படிக்க வைத்துப் பட்டம், பதவி, வேலை வாங்கி வைத்துச் செலவு செய்து நல்ல பெண்ணைத் தேடித் திருமணம் முடித்துச் சொத்தையும் வைத்த தாய், தந்தையரைப் பிள்ளை, எப்படி மறந்து, இடையில் வந்த வளுடன் வாழ விழைகிறானோ' யாம் அறியோம் பராபரமே!

83 பிள்ளைகள் சிறுவர்களாக இருக்கையில் வளர்ப் பது கஷ்டமாக இருப்பதைவிட அவர்கள் சம்பாதிக்காம லும் சம்பாதிக்கும் போது சரியாக இல்லாமலும் போகும் போது ஏற்படும் துன்பம் பெரிது.

84 பிள்ளைகள் நன்றாக இருக்க வேண்டுமென்று எல்லா பெற்றோர்களும் நினைக்கிறார்கள். அப்படி எல்லா பிள்ளைகளும் பெற்றோர்கள் நலமாக இருக்க வேண்டு மென்று நினைப்பதில்லை.

85 பிள்ளைகள் மகிழ்ச்சிக்குப் பல பெற்றோர்கள் சிரமப் படுகின்றனர். பெற்றோர்கள் மகிழ்ச்சிக்கும் சிரமப்படும் பிள்ளை எங்கோ ஒன்று இருக்கவே செய்யும்.

86 பெண்மை அழகு, தாய்மை இருப்பதால் தான். கற்பெனும் அழகு தாய்மையில் இருக்கிறது.

87 அப்பனின் செல்வாக்கிலும், செல்வத்திலும் பங்கு பெறும் பிள்ளைகள், அப்பனின் துன்பத்திலும், அப்பன் தோல்வியிலும் பங்கு கொள்வதில்லை.

88 பெற்று வளர்த்துக் கற்பித்துக் கல்விமானாக்கி நற்பணிக்கு ஆளாக்கி வைக்கும் அப்பனைப் பிள்ளைகள் மறந்து விடுகிறார்கள்.

ஆனால், வயதான பெற்றவன் மட்டில் அவனுடைய அப்பனையும் எல்லோருக்கும் அப்பனான ஆண்டவனை யும் மறக்கிறானே! இது விந்தையிலும் விந்தையல்லவா!

89 இரவு இன்ப நுகர்ச்சியில் ஈடுபட்டவர்கள் என்று, குடும்பப் பெண்களின் முகத்தைப் பார்த்தே மறுநாளன்று சொல்லலாம். ஆனால், பல ஆண்களைப் பற்றிக் கூற முடியாது.

90 இயற்கையில் உந்தப்படுவது காமம். அது வாழ் வில் மிகச் சில சமயங்களில்தான். நம் மன எழுச்சியால் தான் காமத்தை அடிக்கடி தழுவுகிறோம்.

91 இக்காலத் தாய்மார்களுக்குப் பிள்ளைகளிடம் உரிமை குறைவே; காரணம், புட்டிப்பால், தாலாட்டு தெரியாது. தூக்கி வளர்க்கப் பார்க்கக்கூடக் கூலி ஆள்!

92 உள்ளே சென்றவன் புருஷன்; வெளியே வந்தவன் மகன் அல்லது மகள்.

93 தன்னை ஆண்ட புருஷனைத் தன் மகனாக்கு கிறாள் பெண்.

94 பெண்மைக்கே உலகம். ஆக்கி-அனுபவித்து, அளித்து அழிப்பவள் பெண்.

95 ஆண், பெண்ணின் பணிக்கே. பெண்ணின் உறுப்பு கள் இதனை உணர்த்துகின்றன.

96 பெண் உறுப்புகளின் அமைப்பும், தன்மையும் மிக மென்மையும் புரிந்து கொள்ள முடியாத தன்மையும் உடையன.

97 ஆண் உறுப்பு ஒன்று. பெண் உறுப்புகள் இரண்டு.

98 கண்டிப்புடன் வளர்த்த பிள்ளைகள் முரண் பட்டால் கண்டிப்புடன் இருந்துவிடும். சாதாரணமாய் வளர்ந்த பிள்ளைகள் முரண்பட்டால் முறிவதில்லை.

99 மனித ஆதி நிலை, உண்பது, உறங்குவது ஊடுருவுவதாகவே இருந்துள்ளது. இன்றுதான் ஊடுரு வலைக் குறைத்து நாகரிக சிந்தனையிலும் சம்பாதிக்க உழைப்பதிலும் கானம் செலுத்தப்படுகிறது.

100 மண்ணைப் பொன்னாக்கலாம். ஆனால் ஒரு பெண்ணைப் பெண்ணாக்க முடியாது.

101 புருஷன் செயலைப் பின்தொடர்பவளே பெண். அவன் சொல்லை எதிர்ப்பவளும் மீறுபவளும் பேய்.

102 ரசனை உள்ளவர்கட்கு, ரசனையற்ற வசதியுள்ள குடும்பம் அமைவது பெருந்துன்பம்.

103 எவ்வளவு ஏழ்மையான குடும்பம் ஆயினும் சேர்ந்து வசித்தலே பேரின்பம்.

104 நல்ல பாடகனுக்குப் பக்க வாத்தியகாரர்கள் அமைவது போன்று ரசிகத் தன்மையுள்ள குடும்பத் தலைவனுக்கு மனைவி, குழந்தைகள் அமைய வேண்டும்.

105 குடும்பத் தலைவனிடமிருந்து வீணையில் உள்ள நரம்புகளைத் தட்டி நாதம் வரவழைப்பதுபோல் என்றும் நல்ல பயனைப் பெற வேண்டும். அவனிடம் யாவும் உள்ளன.

106 குடும்பத் தலைவனை மனைவி, பிள்ளைகள் தாறு மாறாய்ச் சுரபேதங்களால் அபசுரமாக்கவும் செய்யலாம்.

107 கொள்ளி வைக்கவும், குட முடைக்கவும் பிள்ளை யாய் இல்லாமல், தந்தையைத் தலை நிமிர்ந்து வாழ வைப்பதே பிள்ளைகளின் கடமையாகும்.

108 பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுப்பது உயிருடன் தாரை வார்ப்பதே. அழுதே அனுப்புகிறோம்! அழுது விட்டே போகிறாள்!

109 தனிமையின் இன்பதுன்பங்களைக் கூட்டு வாழ்க்கை வாழ்பவன் உணர முடியாது. கூட்டு வாழ்க்கையின் இன்ப துன்பங்களைத் தனியன் ஊகிக்க இயலாது.

110 பிள்ளைப்பேறு பெற்றால்தான் பெண். பிள்ளைப் பேறு பெற்றால்தான் மற்ற பேறு பெற்றதாகும்.

111 குழந்தையிடம் கொஞ்சும் இன்பத்தை மிஞ்சும் இன்பமில்லை.

112 சொறி, சிரங்கு, தெனவு, இன்பம்! சொரிதல், வெந்நீர் ஊற்றல், நிறுத்தவே இயலாத இன்பம்!

113 இச்சைகள் பூர்த்தியாகாததாலே, பல நோய்கள் வருகின்றன. அதனுல்தான் பாரதி 'நினைவு நல்லது வேண்டும்' என்றார்.

114 சிரங்கில் (சொறி) வெந்நீர் ஊற்றுகிறோம். பல இடங்களில் சொறி உள்ளது. வெந்நீர் வேறு இடம் மாறுவதையே விரும்புவதில்லை. அந்த இடைவேளை இன்பம் குறையுமோ என்று.

அப்படியே உடலில் பல இன்பங்களில் இருந்தும். சிற்றின்பத்தை கண்டவன் இதை விடுத்து பேரின்பம் போகவே அஞ்சிச் சிற்றின்பத்துடன் முடிகிறான்.

115 தாய்மார்கள் பிள்ளை பெறும் துன்பத்தைவிடப் பெற்ற க்ஷணம் அடையும் இன்பம் பெரிது.

116 அறிவாளிப் புருஷனர்களைப் பெரும்பாலும் மனைவிமார்கள் விரும்புவதில்லை.

117 சற்று வயதான ஆனால் கிழவியாகாத நிலையில் கணவனையிழந்த பெண்களுக்குக், கணவனையிழந்த சில வருடங்கட்குப் பின் காமப்பித்து உண்டாகிறது. ஒரு மாதிரி வெறுத்த நிலை.

118 மனைவியானவள் வெளிப்புறத்திற்குக் கற்புக் கண்ணகியாகவும், மஞ்சத்தில் மாதவியாகவும் இருக்க வேண்டும்.

119 பிள்ளைகள் பலரும் தந்தையர்களின் போக்கை மாற்றவே நினைப்பார்கள். காரணம் தந்தையர் எப்படி முன்னேறினார்கள், எவ்வழி வளர்ந்தார்கள் என்பது தெரியாததே.

120 முலை: குழந்தைக்குப் பாலைத் தாங்கி நிற்கையில், அது, அழகான அமுதகலசம் என நான் காண்கிறேன்.

121 வாலிபம் ஒரு சுவை. வயோதிகம் ஒரு சுமை.

122 வயதாக ஆக வாலிப எண்ணங்களும் முதுமையுற்று விடுகின்றன.

123 பெற்றோர்கள் குழந்தைகளை ஆசையால் பொம்மைகள் போல் உபயோகிக்கக் கூடாது.

124 முலையைப் பிசைந்தான்; உறிஞ்சினான்! பின்னர் பிடித்தான்; இழந்தான்!

125 பால் குடித்து வளர்ந்தான்! விந்தை விட்டு மாய்ந்தான்!

126 வாழத் துடித்தான் அவள் மடியிலே! சாகத் துடித்தான், அவள் அடியிலே!

127 வந்த வழியில் போய் மாய்கிறான்!

128 கூட்டுக் குடும்பங்களில் மனைவிகள் புருஷர்களை இரவில் மட்டும் வைத்துக் கொள்ளணும்; பகலில் அவன் குடும்பம் பெரிது.

129 சிறிய மருமகளைக் கண்டித்தேன். வேதனைப் படுகிறேன். புருஷனுக்கு வக்காலத்து வாங்கினாள். பிள்ளையை வளர்க்க வேண்டிய தலைவன் நான்.

130 கெட்ட பழக்கமுடைய புருஷனைத் திருத்த முயல்வது நல்ல மனைவியின் இயல்பு.

131 அறிவாளி புருஷனைத் தன் வழிக்கு மாற்ற நினைப்பது மனைவியின் முட்டாள்தனம்.

132 பிள்ளையில்லாதது வயோதிகத்தில்தான் குறையாகவும், சிரமமாகவும் இருக்கும். பிள்ளைகள் இருப்பது பிறந்தது முதல் பெற்றவர்கள் இறக்கும் வரை இல்லாதது பெரும் தொல்லையே.

133 ஒரு வயதில் மனைவியின் தேவைகள் அபிலாஷைகள் பூர்த்தியான பிறகு அவள் கணவனைக் கவனிப்பது குறையும். அவள் கடைசி வரை கவனிப்பது நன்றியை, நினைத்து அல்லது பழக்கத்தால் ஆகும்.

134 நல்ல மனைவி எந்தக் காரணத்திலும் கணவனை வெறுக்கக் கூடாது. மாறாக நேசிக்க வேண்டும்.

135 வளர்த்த கடா மார்பில் மேயலாம். ஆனால் பாயக் கூடாது.

136 கடைசி ஆண் பிள்ளை மீது தகப்பனுக்குப் பிரியம் ஏன்? இவன் சிறுவன். தந்தை தயவு தேவை. தந்தை முதியவர். சிறுவன் தயவு தேவை.

137. படித்த பெண்கள் குடும்பத்திற்கு அவ்வளவு சிரேஷ்டமில்லை. காரணம், படிக்கப் போனதால் குடும்ப அனுபவம் இல்லை. படிப்பில் குடும்ப அனுபவமில்லை.

138 இளமையில் வீரியம் விட்டவனுக்கு வீரியத்தில் முதுமை முந்தும்.

139 மனிதர்க்கு ஒன்பது வாயில். ஆணுக்கு ஒரு வாயில்தான் பெரியது. பெண்ணுக்கு இரு பெரு வாயில்கள். பெண்ணே பெரியவள்!

140 யோனியைப் பற்றி ஞானி திரு. ராமலிங்க சுவாமிகள் கூறிய சொல் அவ்வவவு பொருத்தமானது. அதாவது, 'புண்' என்றார்.

141 காதலாகிக் கசிந்து என எப்படி வந்தது? காதலால் - சுக்கிலம் - சோனிதம் கசிவது வைத்தே போலும்!

142 பிள்ளைகள் பெற்றோர்கட்கு வயதான காலத்தில் உதவும் என்று நினைக்கிறோம். ஆனால், பிள்ளைகட்குப் பெற்றோர்கள் சுமையாகத் தோன்றுகின்றனர். காரணம், வயதான பின்னர், இவர்களின் தயவு வயதான பிள்ளைகட்குத் தேவையில்லை.

143 வயதான சமயம்தான் பெற்றோர்கட்குப் பிள்ளைகளின் தயவு தேவை. ஆனால் அது, அப்பொழுதுதான் கிடைப்பதில்லை.

144 பிள்ளைகளின் தயவின்றியே வாழ்ந்து முடிக்கும் பெற்றோர்களே அனைத்தும் பெற்றோர்கள்!

145 பெற்றோர்கட்கு உதவாமல் இருக்கும் பிள்ளைகள் நன்றி மறந்த வர்க்கமே.

146 பெற்றோர்கள் பிள்ளைகளைக் கட்டாய உதவியாகக் கருதாமல், முடியாத சமயம்தான் உதவிக்கு நாடணும்.

147 மருமகனுக்கு நிறையச் செய்ய தாய் நினைக்கிறாள். அதேபோல் மருமகளுக்கு நிறையச் செய்ய தந்தை நினைப்பதில்லை. ஆனால், தாய் மகளுக்கும், தந்தை மகனுக்கும் செய்ய விரும்புகின்றனர். இங்கு இன உணர்வு ஆரம்பமாகிறது.

148 ஆணுக்குச் சிரமம் கொஞ்சமும் இல்லை. எனவே பெண்தான் இன்பத்தை அனுபவிக்கிறாள். சுமக்கிறாள். ஊட்டி வளர்க்கிறாள். ஆட்டியும் வைக்கிறாள்! ஆகவே, உலகம் பெண்மைக்கே! ஆண் ஒரு வித்தே. ஆனால், பெண் ஒரு விந்தை!

149 பெண் சிற்றின்பத்தை ருசிக்கிறாள். ஆண் ரசிக்கிறான்.

150 சில வயதான தம்பதிகள், உடல் உறவு தேவை இன்மையால் பற்று, பாசம் குறைந்தவர்களாகவும் இருப்பார்கள்.

151 புண்ணைக் கட்டவும், மறைக்கவும் பெண்ணுக்கு எத்தனை விலையுயர்ந்த புடவை!

152 பெண்ணின் புண், அவள் மனம் ஆறும் வரை ஆறாப்புண்.

153 காமம் ஒரு தீரா நோய். ஒரு வயதிற்கு மேல் அந்த நோயை நாமே அகற்ற வேண்டும்.

154 வாலிபம் சுவை. வயோதிகம் சுமை. அழகான தம்பதிகளுக்கு முதலில் காதல், பிறகு காமம். சற்று அழகு குறைந்த தம்பதிகளுக்கு முதலில் காமம், பிறகு காதல்.

155 ஈதல் இன்பம். பெறுபவருக்கும் இன்பம். இல் வாழ்விலும் மனைவி இன்பம் பெருகிறாள். கணவன் இன்பம் அளிக்கிறான். இருவருக்கும் இன்பமே.

156 ஆண் பெண்ணிடமோ, பெண் ஆணிடமோ அதிக பாசம் வைத்து ஒடுங்கி விடுகிறார்கள். இவற்றை மீறிக்

காவியம், ஓவியம், விஞ்ஞானம், கலை, போன்றவற்றில் லயித்து அதனுடனே ஒன்றி ஒடுங்குகிறவர்களை உலகம் போற்றுகிறது!

157 சம்பாதிக்கின்ற மனைவி 'பொன் வாத்து'. ஒருத்தியைக் கிரஹலக்ஷ்மியாக வைத்துக் காத்துப் போற்றி வருவது தான் சாலச் சிறந்தது. சம்பாதிக்கும் மனைவியைக் காப்பது பணத்துக்காகவும் என்று ஆகிறது.

158 சிற்றின்பம் என்பதில் மனிதன் தன்னை மறந்து, மற்றதை மறந்து இன்பத்தில் மட்டும் லயிக்கிறான். பேரின்பம், தன்னை மறந்து இறையில் ஒன்றி லயித்தல். வேறு விஷயங்களில், மனிதன் சிற்றின்பத்தைப் போல் பெரும்பாலும் ஒன்றி லயிப்பதில்லை. அப்படி லயித்தால் அதுவும் பேரின்பத்துக்கு வழியே.

159 கணவன் அவனை அழகு பண்ணிக் கொள்வது முதலில் தன் மனைவிக்காகவே இருக்கவேண்டும். தன் மனைவிதானே என்று அவள் எதிரில் தன்னை அலங்கோலமாக வைத்துக் கொள்ளக் கூடாது. அதே போன்றே மனைவியும் தன் கணவனைக் கவருவதை முதல் வேலையாக அமைத்துக் கொள்ளவேண்டும்.

160 எந்த ஆணும் ஒரு பெண்ணின் மகனே. அதனால் தான் அவன் பெண்ணை நேசிக்கிறான். பெண்ணுக்கு அடிமையாக இருக்கிறான். பெண்ணிடம் தஞ்சம் புகுகிறான். பெண்ணை வணங்குகிறான். பெண்ணைப் போற்றுகிறான்.

161 எல்லா புருஷனும் தன் மனைவியை மகிழவைக்கவே பல தவறுகளையும் செய்கிறான். இதனை அனேகமாக அனைத்து மனைவிகளும் புரிந்து கொள்வதில்லை. அதைப்புரிந்து ரசித்தும் தடுத்தும் வாழ்பவளே. கணவனுக்கேற்ற மனைவி.

162 ஒருவன் முழு மனத்தோடு, தொடர்ந்து நேசிப்பவர்களிடம் சென்று விழுந்து தனது அனைத்து அலுப்புகளையும், கஷ்டங்களையும் கொட்டி விடுகிறான். பின்னர் மனத்திற்குப் பூரண ஓய்வும் நிம்மதியும் அடைகிறான்.

அப்படி பெரும்பாலும் மனிதன் பல மனிதர்களைத் தொடர்ந்து நேசிப்பது குறைவு. ஆனால், கணவன், மனைவி தொடர்பில் பெரும்பான்மை இந்நிலை ஏற்படுகிறது. எனவேதான் கணவன், மனைவி உறவு சிறந்தது.

கணவன், மனைவி உறவு போன்று கள்ளக்காதலிலும், இந்த நிலை ஏற்படுகிறது. அதையே மனிதன் அடைக்கலமாகவும் தஞ்சமாகவும் கொள்கிறான்.

163 எனக்கென்று ஒரு வாழ்வு இல்லை. நான் அவள் கைப் பாவை. அவளை நினைப்பதே என் தேவையும் சேவையும்.

164 பல இன்ப நுகர்ச்சிகளில் மனிதன் தன்னையும் தனது சொத்துக்களையும் இழக்கிறான். ஆனால், கொஞ்சம் கொஞ்சமாகச் சிற்றின்பத்திலும், பேரின்பத்திலும் விரைவில் தன்னையும், தனது சொத்துக்களையும் இழக்கிறார்கள்.

165 சிற்றின்பமும், பேரின்பமும் தான் உண்மை இன்பங்கள்! (சட்டி சுட்டதடா! கை விட்டதடா!)

166 போகம் முடிந்த காலை, பெண்களைக் காணின் களைப்பாகவோ, களையாகவோ தெரியும். ஆண்களில் பெரும்பாலும் தெரியாது.

167 வயதான கணவனுக்கு மனைவியைப் பிரிந்திருப்பது; குழந்தை தாயைப் பிரிந்திருப்பது போன்றது.

168 மனைவிக்குக் கணவனைப் பிரிந்திருப்பது எல்லாம் அற்ற அனாதையைப் போன்றது. காரணம், மணக்கும் போதே தாய் தந்தையை இழந்தே வருகிறாள்!

169 கிழவி குமரனை விரும்புவாள். கிழவன் குமரியை விரும்புவான் கிழவனுக்குக் கிழவியை, கிழவிக்குக் கிழவனைத்தான் பிடிக்காது!

170 பெற்றவர்கட்குப் பிள்ளைகள் உற்றவர்களாக இருப்பதில்லை. மற்றவர்களாக இருக்கிறார்கள். ஆனால் பெற்றவர்களோ பிள்ளைகளையே உற்றவர்களாக நினைக்கிறார்கள்.

171 இளமைப் பருவத்தைத்தான் பெற்றோர்கள் மிகவும் முக்கியமாகக் கருதிப் பிள்ளைகளைக் கவனித்தல் வேண்டும்.

172 கொஞ்சும் மனைவியைக் கணவன் விரும்புவான். கெஞ்சும் புருஷனை மனைவி விரும்புவாள்.

173 பெண்கள் அழகாக இருக்கலாம். காமக் கிளர்ச்சியூட்டும் படி இருப்பது ஆபத்து.

174 காமமும், போகமும் கூடப் பழக்கத்தைப் பொருத்ததே, அடிக்கடி ஏற்படுகிறது.

175 வயதான காமம், செயலுக்குக் காத்திருக்கும். வாலிபக் காமம், செயலுக்குத் துடியாய்த் துடிக்கும்!

176 மனைவி தன் கணவனைப் புகழ வேண்டும். யார் இகழ்ந்தாலும் அவனைப் பாதிக்காது. மனைவி இகழ்ந்தால் வேதனைப் படுவான்.

177 புருஷன் மனைவியைப் புகழ்வது தப்பில்லை. அதனால், மனைவி கர்வம் கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

178 ஸ்திரி சம்போகம் கெடுதல். இருப்பினும் 30 வயது வரை ஒரு அளவாக இருக்கணும். 50-க்கு மேல் நிதானம் வேண்டும்.

179 ஆண், சொத்துகளைப் பெண்ணுக்காக இழந்தால் அது காமவெறி! பெண், சொத்துக்களை ஆணுக்காக இழந்தால் அது காமருசி!

180 ஆரியனைத் திராவிடப் பெண் மணந்து கொள்ளலாம். திராவிடன் ஆரியப் பெண்ணை மணந்து அடக்கியாள மிகவும் திறமையும் ஜாக்கிரதையும் சதா விழிப்பும் தேவை.

181 பாரமான குடும்பத்தைச் சுமக்கலாம். பிரிவு அவ்வளவு சிரமம் தராது. பாசமான குடும்பத்தை விட்டுப் பிரிவதைத் தாங்கவே முடியாது.

182 என் மனத்திற்குப் பிடித்தது; உச்சி முதல் உள்ளங்கால் வரை தேய்த்துக் குளித்து, அன்றாடம் தூய வெண் கதராடைஉடுத்தி, முகம் சிங்காரித்துத் தலைவாரிச் செயல்படுவதே. அதே போல் என் மனைவி மக்களும் இருக்க வேண்டும். ஏனைய மக்களும் முடிந்தவரை பொருளாதாரம் இடம் தரும் வகையில் அவ்வண்ணமே இருக்க விரும்புகிறேன்.

183 பிள்ளைகளைவிடப் பெண்கள் பெற்றோரை அதிகமாக நேசிக்கிறார்கள் பெண்மை அல்லவா?

184 நான் ஒரே பையன். என் தாயாரும் ஒரே பெண். என் தந்தையாருக்கு அண்ணன் இருந்தும் ஒருவர். அதனால், என் குடும்பக்கிளை பெரிது அல்ல. ரத்த பாசங்களும் எனக்குப்புரியவில்லை. இதில் வேதாந்தம் வேறு! — இன்றைய என் பெரிய குடும்பம், குழந்தை, மற்றும் உறவுகளைக் காணும் சமயம்தான் நான் உண்மைப் பாசங்களை உணர்கிறேன்!

185 வயதானவர்கள் வாழ்ந்த காலங்களில் அலைந்து, அலைந்து பழகியதால், பிள்ளைகளின் பாதுகாப்பில் இருக்கையிலும், குடும்ப காரியங்களில் தலையிட்டு அலைகின்றனர். இது மிகவும் தவறு. மனத்தை அடக்கிப் பழகணும்.

186 இயற்கையில் சிகைகள் இருப்பது அழகு. அதிலும் மாணியிலும், யோனியிலும் தனி அழகு! அதை மழித்துப் பார்த்தால் விகாரத் தோற்றம்.

187 நீச்சல் உடை அணிந்து குளிக்கும் மாதர்களைக் காணும் போது ஏற்படும் இன்ப எழுச்சியைவிட, மார்பில் புடவையைக் கட்டிக் கொண்டு கால், துடை சிறிது தெரியக் குளிக்கும் மாதர்களைக் காணும் போது எழும் எழுச்சி மிகவும் அதிகம்.

188 கொஞ்சம் கொஞ்சமாக ஆடையை நீக்கிப் பிகுவோடு கெஞ்சியும், கொஞ்சியும் மிஞ்சும் ஆடை அகன்றால் அது ஒரு சுவையான இன்பம்! திடீர் என முழு நிர்வாணமாக்கப்படுவதோ, நிர்வாணமாய்த் தோன்றுவதோ சுவை இல்லை!

189 இல்வாழ்க்கையில் இருந்து விடுபடுவதை வீட, இல்வாழ்வில் சிரமம் குறைவே.

190 பெண் போகம் தருபவளாக மட்டும் இருந்தால் போதாது. மோகம் தருபவளாகவும் இருக்க வேண்டும்!

191 கிழவர்கள், குமரிகளைப் பார்க்கிறார்கள். கிழவிகள், குமரர்களைப் பெரும்பாலும் பார்ப்பதில்லை!

192 பெற்றோர்களின் பாசத்தைப் பிள்ளைகட்குப் படிப்பு, வேலை, திருமணம் வரை வைப்பது நியாயம். அதற்கு மேலும் வைத்தால் பிள்ளைகளின் கோபத்திற்குத் தான் ஆளாகணும். பாசத்திற்கும் ஒரு எல்லை உண்டு.

வேண்டும். இல்லையேல், அந்தப் பாசமே பெற்றோர் கட்கு நாசமாக முடியும்!

193 'கணவன் மனைவி என்பது குடும்பம், 'காதல் என்பது தனி இன்பம்' என நினைக்கின்றனர். இரண்டும் ஒன்றே. மனப்பான்மைதான் வேறு. கணவன் மனைவி அன்பு, காதலால் கனிய வேண்டும்.

194 பெண்மை, மென்மை. ஆனால், போகத்தில், அவள் 'கடுமையை' விரும்புகிறான். அதில் அவளுக்கு மிக்கச் சுவை. அந்தச் சுவையை. 10 மாதம் சுமந்து பிரசவத்தின் வேதனையில், உச்சத்தில் அனுபவிக்கிருள்.

195 ஆணின் மிருக உணர்ச்சிகளையும் அவள் தாங்கித் தன் உணர்ச்சிக்கு ஈடுசெய்து கொள்கிறாள். அவள் உணர்ச்சி அவன் உணர்ச்சிக்கு ஈடாகாது. இந்த உண்மை அவனுக்குப் புரியாது!

196 கணவனை விட மனைவி அறிவாளியாக இருப்பினும் அதனைக் கணவன் மனம் புண்படக் காட்டிக் கொள்ளக்கூடாது.

197 ஒரு மனைவியால் ஒரு கணவனைத் திருத்த முடியவில்லை,யாரைல் யாராலும் திருத்த முடியாது.

198 மனைவி, படுக்கை அறையில், தான், வெட்கம் விட்டு முழுச்சுகம் காணக் கணவன் விரும்பும்படி நடந்து கொள்ளணும். அதே சமயம், மனைவி, தனது இன்பசுகங் களுக்கு ஏற்பக் கணவனை நடந்து கொள்ளுமாறு காம லீலையில் கேட்கணும்.

199 மனைவி என்பதை விடத் 'துணைவி' என்பதே சரி. ஒன்றை என் பிள்ளைகள், நண்பர்கள், ஏற்கவில்லை. ஒரு நியாயத்திற்கு என் மனைவிதான் துணை நின்றாள்!

★

# உலகியல்

1 நம்பிக்கை நலம் தரும்; நாசமும் தரும்.

2 பொருள் சேரும் போது, செலவு செய்யாமல் சிக்கனமாக இரு. செலவாகும் பொழுது நிறையச் செலவு செய்து விடு.

3. கடவுளை வணங்கும் முறைகளையும் பூஜிக்கும் அல்லது அர்ச்சிக்கும் வகைகளையும் நன்கு நோக்கினால் அவை ஒவ்வொரு மனிதனும் நல்லுணர்வுடன் நீண்ட காலம் வாழ உதவும் நற் பயிற்சிகளாகும்.

4 உலகில் ஒன்று ஒருவனுக்கு இன்பமாக இருக்கும். அதே ஒன்று வேறு ஒருவனுக்குத் துன்பமாக இருக்கும்.

5 என் வீட்டிற்கு 'Atom home' எனப் பெயர்.

6 நட்பு கொள், அறிவிற் பெரியோர்களிடம்.

7 நான் வாழ்க்கையில் வரும் ஒவ்வொரு கட்டத்தையும் நடிப்பாகவே நடிக்கிறேன் காரணம், அடிக்கடி பாத்திரம் மாறுகிறது. நடிப்பை நன்றாக நடிக்கவேண்டும் அது நடிகன் கடமை.

8 கெட்டதை ஒரு தடவை கூடக்—கணப்பொழுது கூடச் செய்யாதே. அது உன்னை ஐக்கியப் படுத்திக்

கொள்ளும் உதாரணம்: இன்று தூங்கக் கூடாது என்று முடிவு கட்டினேன். என்னை மீறி ஒரு வினாடி கண்ணயர் வோம்' என்று எண்ணினேன். உடன் அதற்கு அடிமைப் பட்டுத் தூக்கத்தில் ஆழ்ந்தேன்.

9. தூக்கம் மாயை, பிணமாக்கும். உணர்வு அற்றிருக் கும் ஒரு காலம். விழித்தால் விழித்துக் கொள். மீண்டும் தூங்காதே உன்னை ஏய்த்துவிடும்.

10 ஆசை ஓசையாகும் முன் நிதானம் வேண்டும்.

11 நாட்டில் டாக்டர்களும், வக்கீல்களும் மூட்டுப் பூச்சிகள். காரணம், மூட்டுப் பூச்சிகளுக்கு இரத்தம்தேவை. அவர்களுக்குப் பணம் தேவை. இரண்டும் ஏழை பணக் காரன் என்ற வித்தியாசமின்றி நடக்கிறது.

12 பணத்தில் உயிர் வைத்திருக்கும் பாவிகள் பலர்.

13 அடிமையில் விடுதலை உண்டு: ஆனால், 'அன்பு அடிமையில்' இல்லை, விடுதலை.

14 உனக்குச் சம நோக்கு இருக்க வேண்டும். நீ மட்டும் முகத்தை அன்னியர்கள் வெறுக்கும்படி வைத்துக் கொள்ளாதே. காரணம், எல்லோர்க்கும் சமநோக்கு இருக்காது.

15 புன்நகை பூத்திடு! அன்பாய்ப் பார்த்திடு! இனிமையாய்ப் பேசிடு!

16 வாழ்க்கையே பெரும் போராட்டம். வெற்றி பெறுவதுதான் வாழ்க்கையில் ருசி.

17 என் அவா "நல்ல பத்திரிகை" என்று ஒரு வார நீதிச் செய்தித்தாள் நடத்த வேண்டும்.

18 ஒருவருக்கு ஒன்றை நாம் தந்து விட்டால் அதை அவர் சர்வ உரிமையுடன் பயன்படுத்திக் கொள்கிறார்.

அதே ஒன்றை நாம் மீண்டும் உபயோகிக்க அவர் அனுமதி வேண்டும். பிள்ளைக்கு 00-3 கொடுத்தால் அதை அவன் 'என் காசு, என்னிஷ்டம்' என்கிறான். கேட்டால், கொடுக்க மறுக்கிறான். நம்மிடம் இருக்கும்போது அப்படி அவன் நினைப்பதில்லை. கொடுப்பதை யோசித்துக் கொடு.

19 ஒருவனுக்குப் புதிய அதே ஒன்று, ஒருவருக்குப் பழசு.

20 மனிதன் தான் உலகம். மனிதன் நல்லது என்று முன்னோர் செய்ததை அனுபவித்து வாழ வேண்டும்.

21 மௌனமாய் இருப்பதனால் எவ்வளவு நல்லதோ, அவ்வளவு கெடுதலும் இருக்கிறது. 'மௌனம் கலக நாஸ்தி' என்கின்றனர், எல்லாச் சந்தர்ப்பங்களிலும் அல்ல•

22 இன்றைய நிலையில் உண்மை யோக்கியன், மெய் சொல்லுபவன், நல்லவன், தன்னைப் பற்றி 'நான் யோக்கியன்' என்று சொல்லிக் கொள்ளக் கூடாது. அது அவனைப் பெரிதும் பாதிக்கும், காரணம், அயோக்கியத் தனம் நாட்டில் பெருகி 'யோக்கியதை' என்பதின் பொருளே தெரியாத நிலையில் இருக்கிறது.

23 கோள் சொல்லுதல், வாள் கொண்டு வெட்டுவதினும் கொடிது. "கோள் சொல்லித் திரிய வேண்டா."

24 பிராமணர் நயமாகவும் கடிந்தும் வேலையை வாங்கிக்கொள்வர். காரியசித்தி பெறுவதில் சமர்த்தர்கள்.

25 நல்லவன், கெட்டவன் அவன் வாயில். மனத்திலும்தான்.

26 லஞ்சம் கொடுப்பதே லஞ்சம் வாங்கத்தான்; ஆதாயமின்றி எவனும் லஞ்சம் கொடான்.

27 சில மலையாளத்தவர்களிடம் அவ்வளவு மரியாதையான தன்மையில்லை என்றே நினைக்கிறேன்.

28 காரணமின்றிச் சுற்றுவது மெத்தத் தப்பு.

29 இட்டார் பெரியோர்! இடாதார் இழி குலத்தோர். இதுஅறிவாளி. கொடுத்தால் நல்லவர், கொடுக்காவிட்டால் கெட்டவர்—இது சாமான்யன்.

30 அன்று குணம் பெரிது: இன்று பணம்தான் பெரிது!

31 பணக்காரன் என்றும் அடிமை; ஏழை என்றும் சுதந்திரவான். ஆனால், பார்வைக்கு இப்படித் தோன்றாது!

32 வசதி மிகின் அசதி மிகும்.

33 பங்காளி என்ற சொல் விஷம் கலந்த சொல்.

34 பணக்காரர்கள் அல்லது பெரிய மனிதர்கள் சவகாசத்தில் நன்மையைவிடத் தீமை நேருவது சுலபம்.

35 தமிழ்=இனிமை என்பது போல், போலீஸ் பொய்மை. எங்கள் நைனா ஒரு யோக்கியமான போலீஸ்!

36 உலகில் நடக்கும் ஒவ்வொரு நல்லதும், கெட்டதும் நம்மை ஓர் அளவு அவசியம் பாதிக்கிறது.

37 விளையாட்டுக்குக் கூடப் பொய் சொல்லாதே; பாம்பு, விளையாட்டுக்குக் கடித்தாலும் விஷம்.

38 ஆடை, அரை மனிதன், அந்தநாள். இப்பொழுது ஆடையே மனிதனாகக் கருதப்படுகிறது!

39 பொறுமையால், வறுமையை எதிர்க்கலாம்.

40 ஒருவனை அடித்து விடுவதைவிடக் குற்றத்தை கண்டிக்க, அவன், அதை உணரும்படி புத்தி சொல்வது மேலானது.

41 வக்கில்களுக்குதான் பொய் சொல்லக் கூலி கொடுக்கப்படுகிறது. திடமாய்ப் பொய்சொல்லி ஏமாற்றும் வக்கிலே அறிவாளி என்கிறது உலகம்.

42 அதிக சீக்கிரம் அமைதியின்றி முன்னேறும் எதுவும் அதே வேகத்தில் சீர்கெடும்.

43 தீபாவளி பண்டிகை ஏழைக்குதான். பணக்காரனுக்கு அன்றாடம் தீபாவளிதான்!

44 பிராமணன் சுத்தமான சுயநலம்.

45 பாலில் தண்ணீர் கலக்க வேண்டி ஓட்டல்காரன், பால்காரனிடம் தண்ணீர் கலக்காமல் பார்த்து வாங்குகிறான். திருட வேண்டியவன், எதிரி திருடாமல் பாது காக்கிறான்.

46 நம்மைக் கண்டு பயப்படுகிறவர்களிடம் நமக்குப் பயம் ஏற்படுகிறது. காரணம், பரிதாபம், வாஞ்சைதான்.

47 பிறருடைய ரகசியங்களைத் தெரிந்து கொள்வது அபாயகரமானது.

48 நம்புவதால் தான் நம்புபவனும், நம்பப் படுகிறவனும் பாதிக்கப் படுகின்றனர்.

49 "நம்பினேன் என்னை மோசம் செய்தான் என்கிறோம்." நம்பியதால்தான் அவன் மோசம் செய்ய நினைக்கிறான்! மோசம் செய்கிறான்.

50 ஆடையில் அழுக்குப் படாமல் பாதுகாக்கிறோம். துவைத்தால் போய்விடக்கூடிய அழுக்குப் பட்டாலும்

பதருகிறோம். ஆனால், நிரந்தரமாக அழுக்குப் போகாத அதாவது சாயம் போகாத துணி வாங்குகிறோம்!

51 எந்த அயோக்கியனும் முதலில் யோக்கியன்தான்.

52 வேலை வாங்குவதைக் காட்டிலும், வேலை செய்வது சற்றே சுலபம்.

53 எதையும் எல்லோராலும் அனுபவிக்க இயலாது.

54 பயந்தால்தான் பொய் சொல்ல வேண்டும். மெய் சொல்பவன் தான் தைரியமான வீரன்.

55 கிழிக்கவும் கூலி, நெய்யவும் கூலி! விற்பனை செய்யவும் ஆள்கள் உற்பத்தி செய்யவும் ஆள்கள்.

56 நம்மூர் விஷயங்களை வெளியூரார்கள் நம்மை விடக் கூர்ந்து கவனித்து அறிவார்கள். காரணம், அவர்கள் வெளியூரைப் புரிந்துகொள்ள வேண்டியவர்கள்.

57 அன்றாட உபயோகத்திற்குத் தேவையான 'பல சரக்கு வியாபாரம்' மேலான வியாபாரம். வியாபாரம் ஒன்று என்றால் அதில் எல்லாம் இருக்க வேண்டும். எண்ணெய் வியாபாரம் என்றால், எண்ணெய் வகை யாவும், வாசனை எண்ணெய், நெய் உட்பட இருக்க வேண்டும்.

58 சிந்தனையுடையவன் சிரமப்பட்டே தீருவான்.

59 யோக்கியனை எல்லோரும் விரும்புகின்றனர். வரவேற்கின்றனர். ஏன்? அயோக்கியன் ஆக்குவதற்குத் தான்!

60 சென்னையில் ஒவ்வொரு தெருவுக்கும் பெரிய போர்டுகளில் 'தெரு ஆரம்பம்', 'தெரு முடிவு' என எழுதப் படவேண்டும்.

61 குளிர் நாடுகட்குப் போக விரும்புகிறவர்கள் அவசியம் ஆறு மாதம் உதகையில் இருந்தால் எல்லா பழக்க வழக்கங்களிலும் அனுபவம் பெறலாம்.

62 ஒன்றைச் சொந்தமுடன் அனுபவிப்பது வேறு. சொந்தமின்றி அனுபவித்தால், அனுபவித்தவரை லாபம்!

63 சொந்தம் ஏற்படின் பந்தம் அதிகம்தான்.

64 சுகத்திலிருப்பவனுக்குப் புறச்செவியில் கூடக் கஷ்டப்படுபவனின் ஈனக்குரல் கேட்பதில்லை. காரணம், அவன் அவனைவிடச் சுகமாக இருக்கும் இடத்தைக் குறி வைத்தும், உள்ள சுகத்தை அனுபவித்துக் கொண்டும் இருக்கிறான்.

65 மனிதனுக்கு மிக்கச் சுலபமானது. தன் உயிரை மாய்த்துக் கொள்வதுதான். எதையும் செய்து விடுகிறான். உயிரை மட்டும் மாய்த்துக் கொள்வதில்லை!

66 மனிதன் பயத்துடன் பல காரியங்களைச் செய்யத் தான் செய்கிறான். பயந்து செய்து, ஆபத்தில்லை என்றால் அதில் அவனுக்கு அளவுக்கு மேல் சந்தோஷம்! பெருமைகூட!

67 ரிக்ஷா இழுப்பவனை, ரிக்ஷாவில் இருப்பவன் சோம்பேறி என்கிறான். என்ன விந்தை!

68 கடன் வாங்கிக் கடன் கொடுத்தால் கடமை ஆகாது.

69 என் வீட்டில் குழம்பு வைக்கவில்லை என்றால் எங்களுக்குக் கஷ்டம் இல்லை; பிச்சைக்காரருக்குக் கஷ்டமாய் இருக்கிறது!

70 உண்மை சொல்வதற்கு இவ்வுலகில் எவ்வளவோ பயப்பட வேண்டியிருக்கிறது.

71 சுயநலம் வரும் பொழுதுதான் மனிதனின் உண்மை நிலையைச் சோதிக்க முடியும். எவனும் சுய நலத்தை விட்டுக் கொடுக்க மாட்டான். ஓரளவு விட்டுக் கொடுத்தாலும் போற்றப்பட வேண்டியவனே.

72 பெரிய மனிதர்களிடம் கடன் கொடுத்து வாங்கு வதை விட ஓர் ஏழைக்கு இனாமாகக் குறைந்த அளவு தருமம் செய்வது எவ்வளவோ மேல்.

73 பெரும்பாலான பணக்காரர்கள் இன்று ஏழை களைப் போல் பேசியும் நடித்தும் வருகிறார்கள்.

74 அனேகமாக எல்லாரும் குறித்த காலத்தில் தருவ தாகச் சொல்லி வாங்கும் கடன் தொகையை அப்படிக் கொடுப்பதில்லை.

75 எந்த நல்லவர்களையும் நம்பி எதிர்பார்த்து எதிலும் இறங்க வேண்டா.

76 செலவு செய்கையில்தான் சிந்தனைக்கு வேலை தர வேண்டும்.

77 செலவு செய்வதால்தான் சிலருக்கு வறுமை வருகிறது.

78 பழக்க வழக்கத்தில் தெரியும், அவனவன் பிறப்பும் வளர்ப்பும்.

79 எல்லாப் பணக்காரர்கட்கும் ஏழைகள்தான் தருமம் செய்கிறார்கள். ஆனால், இதை யாரும் நம்ப மாட்டார்கள்!

80 உருக்கத்துடனும், உணர்ச்சியுடனும் பேசும் பேச்சில் உணர்ச்சி வசமாகாமல் இருக்க முடியாது!

81 'வாழ்க்கை எதிர் காலத்தில் பரிணமிக்கும். அப்பொழுது ஆடம்பரமாக இருக்கலாம்' என்றிருப்பான்

ஒருவன். 'நடந்தவரை சரி, நாளை எப்படியோ' என்றிருப்பான் ஒருவன். அவனவன் எண்ணப்படி இரண்டும் சரியே. என்றைக்கும் ஒரே விதமாக இருப்பவனைப் பற்றிக் கவலையில்லை.

82 நல்லவர்கட்குக் கெட்ட குடும்பம் அமைவதால் தான் அவர்கள் மேலும் அனுபவசாலிகளாகவும், அறிவாளிகளாகவும் ஆகிறார்கள்.

83 நல்லவர்கட்கு ஒரு கெட்டது. கெட்டவர்கட்கு ஒரு நல்லது' என்கின்றனர். அதனால்தான் பேதம் தெரிகிறது என்பதுதான் இதற்குக் காரணம்.

84 கைக்கடிகாரம் ஒரு முறை பழுதுபட்டாலும் அது ஒரு பெருங்குறையே; மங்கை ஒரு முறை பழுது பட்ட மாதிரிதான்.

85 யோக்கியனை விட அயோக்கியன்தான் தடபுடலாகவும் படாடோபமாகவும் நடந்து கொள்வான்.

86 திருட்டைக் கண்டு பிடித்தவன் திருடனைக் கருணையோடு மன்னித்து மறந்து விடுவான். ஆனால் திருடன் அப்படி மறப்பதில்லை!

87 மரியாதையைப் பிறர் சொல்லிக்கொடுப்பதாலும் இப்படி இப்படி நடந்து கொள்வதால் வரும் என்ற எண்ணத்துடன் நடந்து கொள்வதாலும் நிரந்தரமாக அடைய முடியாது.

88 ஒருவன், ஒருவனை ஏமாற்றுவதும், அவன் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதும் தான் இன்றைய வாழ்க்கை.

89 ஒவ்வொரு குள்ளனும் தான் அவ்வளவு குள்ளமில்லை என்றே நினைக்கிறான். ஒவ்வொரு உயரமான

மனிதனும் தான் அவ்வளவு உயரமில்லை என்றே நினைக்கிறான்.

90 சுற்றுப்புறம் உன்னை ஏமாற்றவே எண்ணுகிறது. உன்னை உத்தமனாக இருக்க விடாது. ஆகையால் நீ ஏமாறாதே.

91 பெரிய மனிதர்களாக இருப்பதற்கு அவசரத் தன்மை கூடாது. அமைதி, நிதானம் வேண்டும்.

92 கடன் வாங்கி வாழ்கிறவன் வாழ்க்கையைக் கடமை என்று எண்ணுபவன். கடனின்றி வாழ்க்கை நடத்தத் தெரிந்தவன் வாழ்க்கையை ஒரு கலை என்று உணர்ந்தவன்.

93 ஒவ்வொரு மனிதனும் உயர்ந்தவனே. எல்லோர் நிலைக்கும் அவன் அவனுக்குத் தாழ்ந்தவன் இருப்பதாகவே எண்ணுகிறான். ஆனால், உயர்ந்தவன் என்பதைப் புரிந்து கொள்ளவில்லை.

94 கடன் வாங்கும் பழக்கம் பள்ளிப் பிள்ளைப் பருவத்தில் சொல்லித் தரப்படுகிறது. கடன் வாங்கிக் கழித்தல்! அதையே வாழ்க்கையில் செய்கிறான்.

95 கடனின்றி வாழ்வதைவிடக் கண்ணியமான வாழ்க்கை இல்லை.

96 கடன் கொடுக்காதவர்களே ஒரு வகையில் நல்லவர்கள்.

97 அவனவன் அளவுக்கு அவனவன் எக்கிப் பார்ப்பான். அணிலைக் கண்டேன்.

98 அன்பும் பண்பும் நெருங்கிய பொருள்கள் அன்பு பண்பை வளர்க்கும், பண்பு அன்பைப் பெருக்கும்.

99 திருடனும், பறி கொடுத்தவனும் பதறிக்கொண்டு தான் இருக்கிறார்கள். திருடியவன், 'எப்படியோ அபகரித்து விட்டோம்' என்று அஞ்சுகிறான். விட்டவன், 'நம்மது எப்படியோ நம்மை விட்டுப் போய் விட்டதே!' என்று ஏங்குகிறான்.

100 நாம் மறந்தால் மறதிதான். ஆனால், பிறன் மறந்தால் அதை நாம் எளிதில் ஏற்றுக் கொள்வதில்லை.

101 கள்ளமில்லா உள்ளமிருந்தால், கலக்கமில்லா நெஞ்சு அமையும்.

102 மனிதன் மனிதனின் திருட்டைப் பாதுகாக்கவே மதில்கள், இரும்புக் கதவுகள் போடப்படுகின்றன; மிருகங்களுக்குச் சாதாரண வேலியே போதும்!

103 அறிவாளியாக வாழ்வதை விடக் கடினமான வாழ்க்கை வேறெதும் இல்லை. அறிவிலியாக வாழ்வது சிரமமில்லா வாழ்வு.

104 வயது ஆக ஆக மனித இனம் தன்னை அழகு படுத்திக் கொள்ள நினைக்கிறது. சிறு வயதில் 15—25 அழகு முதிரும் பருவம். அழகை அதிகப்படுத்திக் கொள்ள ஆசை. பிறகு, அழகு குறைந்து கொண்டு வரும்; அழகை நிலைநிறுத்த நினைத்துப் பாடுபட்டுக் கொண்டு வருவாய்.

105 அறிவாளியின் வாழ்வில் ஏற்படும் எல்லாத் துன்பங்களும் அவனுக்கு நல்ல ஆசான்களைப் போல் இருந்து மேலும் அறிவை வளர்க்க உதவும்.

106 இன்றைய காசுக் கடை (நகைக் கடை) ஒவ்வொன்றும் ஒரு பகல் கொள்ளைக்காரன் கடையே.

107 பவுன் என்பதே ஒரு ஏமாற்றுப் பொருள்! அதில் நடக்கும் ஏமாற்றமோ அதைவிடப் பன் மடங்கு!

108 அனேக ஏழைகள் அறிந்தோ, அறியாமலோ பணியாமல் இருக்கிறார்கள். பணிவுதான் பலன் தரும்!

109 ஏழை பணிந்தால் கோழை என எண்ணுவார்கள் பணக்காரன் பணிந்தால் பண்பு என்பார்கள்.

110 ஏழைகளின்சொத்து பணிவும், பணியாமையுமே!

111 இறுமாப்புக்கு எதிர்த்தலும் அன்புக்கு அடிமையாதலும் அறம்.

112 நட்பில் சம அந்தஸ்துடையவர்கள் நட்பே சிறந்தது.

113 பணக்கார நட்பு என்றைக்காவது ஒரு நாள் மன வேதனையை உண்டு பண்ணும்.

114 உயிரற்ற பணத்தை, உயிர் உள்ள உயிர்ப் பிணங்கள், உயிரை விட மேலாக மதிப்பது பெரும் விந்தை!

115 இன்றைய உலகம், அன்பு, நட்பு ஆகிய இரு பெரும் பொருளையறியாமல் பண்பு கெட்ட, அன்பற்ற அற்பர்களைப் பணமிருப்பதால் மதிக்கும் வெட்கம் கெட்ட நிலை வேடிக்கையாக இருக்கிறது!

116 வாய் வாழ்த்துவதற்கேயன்றி வைதற்கு அல்ல. 'வாயார வாழ்த்தி மனமாரப் புகழ்ந்து' என்கின்றனர்.

117 ஒரு மனிதனை அழைத்து, "உனக்குக் கால் தேவையா? அல்லது ஒரு கார் தேவையா?" என்றால், கால்தான் என்பான்! அவயவம் சரியாக இருந்தால்—தான் பணத்தைக் கூட அனுபவிக்க முடியும்!

118 பெரியவர்கள், வலியவர்கள், கொஞ்ச பலத்தைச் சிறியவர்களிடம் பிரயோகித்தாலும் கூடச் சிறியவர்கள் முழு பலத்துடன் அதைச் சமாளிக்க முடிவதில்லை.

119 சுயநலம் குழந்தைகளாக இருக்கும்பொழுதே ஆரம்பமாகிறது. மிகச் சிறு· குழந்தைகள் தின்னும் பொருள்களை அவைகட்குப் பிடித்தமானவைகளை வேறு யாருக்கும் தருவதில்லை.

120 இந்த நாட்டில் உயர்ந்த ஜாதி என்று சொல்லிக் கொள்பவன் எல்லாம் வந்து குடியேறியவன்தான்.

121 அதிக உபசாரம் அனாச்சாரம் போல் தோன்றும்.

122 மனிதன் வறுமையிலும்,செல்வம் சேரும்போதும் கணக்குப் பார்க்கிறான்.

123 இன்பம் கலந்து அனுபவிக்கலாம். துன்பம் தனித்தே அனுபவிக்க வேண்டிய ஒன்று.

124 தப்பை யாரும் தன் பேரில் வைத்துக் கொள்வதில்லை. 'ரயில் போய்விட்டது!' தாமதித்தது நாம். அது மணிப்படி போய் விட்டது.

125 டாக்டர் தொழில் உண்மையிலேயே ஒரு தெய்வீக தொழில். இதை உணர்ந்தவர்கள் தான் டாக்டர்கள்.

126 எல்லோரும் உண்மையை மூடி மறைத்து வாழ்கின்றனர். ஒருவன் திறந்து பேசினாலும், அதையும் ஏற்காமல் அதைப் பொய் என்று மீண்டும் கூசாமல் சொல்லி வாழ்கின்றனர்.

127 வயோதிகம் முன்னே செல்ல விடுவதில்லை. வயதானவர்கள் நடக்கும் போது கூட முன்னுக்குத் தள்ளுவதில்லை. பின்னுக்கே தள்ளுகிறது!

128 .பிறரைத் திருத்துவதைக் காட்டிலும் நாமே திருத்திக் கொள்வதே சுலபம்.

129 சுய நலம் இருப்பது தவறில்லை. எதிரி எவ்வளவு சிரமப்பட்டாலும் பர்வாயில்லை. தன் காரியம் நிறை வேற வேண்டும். என்பதுதான் கொடுமை! அய்யர்கள் பலரும் அப்படித்தான்!

130 அறிவாளி, தனவந்தனைப் பைத்தியக்காரன் என்று எண்ணுகிறான். தனவந்தன், ஏழையைப் பைத்திய காரன் என்று நினைக்கிறான்!

131 பணத்தை வைத்துப் பணக்காரன் எடை போடு கிறான். அறிவை வைத்து அறிவாளி எடை போடு கிறான்.

132 செல்வம் இல்லாத செல்வாக்கும், செல்வாக்கு இல்லாத செல்வமும் பயனற்றதே.

133 வயது ஏறிக் கொண்டே போகுமே தவிர இறங் காது. அதுபோல இனிப் பொருள்களின் விலை ஏறுமே தவிர இறங்காது.

134 மனிதன் பிறரையும், பிறவற்றையும் நம்பியே வாழ்கிறான்.

135 மனிதன் தன்னம்பிக்கையற்றவன். தன்னையே நம்புவதில்லை!

136 தன் வீட்டில், தன் அலுவலகத்தில், அரண்மனை யில் தான் இருக்கும் ஆசனத்தை நெருங்கியவர்க்கும் மேலானவர்கட்கும் கொடுப்பது தன்னை அவர்களிடம் ஒப்படைப்பதாகும்.

137 முன்னேற்றமென்பதே எதிர்நீச்சல்தான்.

138 மனிதன் தாழ்ந்து போவதைப் பார்த்து மற்றவன், பரிதாபப்பட்டுக் கொண்டே மகிழ்ச்சி அடைகிறான்!

139 தன்னைவிடத் தாழ்ந்தவர்கள் இருப்பதையே மனித இனம் விரும்புகிறது. உயர்ந்தவனை மதிக்கிறது. ஆனால் விரும்புவதில்லை!

140 உயர்ந்தவனை மதித்தலும்; தாழ்ந்தவனை மிதித்தலும் உலக நீதி.

141 புகழ் வந்தால் இகழ் வருவது உறுதி. இகழ் வந்தால் புகழ் வருவது கடினம்.

142 வக்கீல் பொய் சொல்லுகிறார் போகட்டும். பிறரையும் பொய் சொல்ல வைக்கிறாரே!

143 பட்டதாரி என்றால், மனப்பாடம் செய்தவன் என்று பொருள்.

144 படித்தவர்கள் என்றால் பிறர் எழுதியதைப் படித்தவர்கள் தாம்.

145 சந்தர்ப்பம் நின்று கொண்டிருக்காது. அதற்குப் பெயரே சந்தர்ப்பம்!

146 Men want to earn, But Dosen't want to learn.

147 நம் சொல்லைப் பிறர் நம்ப வேண்டுமாயின் நமக்கு நாம் சொல்வதை நிறைவேற்றும் சக்தியும் திடமும் வேண்டும்.

148 இளமையில் பதவி, புகழ் அனுபவிப்பது மிக்க மகிழ்ச்சியே. பிற் பகுதி பூராவும் பழம் பெருமை பேசியே சாகலாம். முதுமையில், புகழ், பதவி, சொற்ப காலம், இவை குறைந்தாலும், சிரமம் சொற்ப காலமே.

149 ஆண்டுகட்கு முன் நான் கூறியது இன்று (23.2.73) C.M.G நினைவு படுத்தினார். எனக்கும் ஆழத்திலிருந்து நினைவு வந்தது!

150 நான் சிறிய மனிதர்களில் பெரிய மனிதனா? பெரிய மனிதர்களில், சிறிய மனிதனாய் இருக்கிறேனா?

151 உருவங்களை விடப் பெயர் சற்றுக் காலம் நீடித்து நிற்கிறது. சிலைகளைக் காணும்போது அவை ஏன் என்றுகூட நினைப்பதில்லை. பெயர் நீண்ட நாள் உள்ளது.

152 சர்வோதயக் கதர்கடையால் நான் அறிவாளி யானேன். ஆனால் ஆற்றலை இழந்தேன்!

153 நோயாளி, டாக்டரைக் கடவுளை விட நம்பு கிறான். ஆனால், டாக்டருக்கு அது புரிவதில்லை.

154 டாக்டர்களில் சிலர்தான் டாக்டர்கள். பலர் சம்பளத்திற்குத்தான் டாக்டர்கள்!

155 தன் கையே தனக்கு உதவி என்பது ஒவ்வொரு மனிதனும் பிறர் உதவியை நாடும்போதுதான் மிகவும் உண்மையெனத் தெரியும்.

156 வயதானவர்கள், தன்னிலும் வயதானவர்களின் திடத்தைக் கண்டு நமக்கு அவ்வளவு வயதாகவில்லை என எண்ணுகிறார்கள்.

157 எதையும் இழக்கலாம். தன்னை இழக்கக் கூடாது!

158 ஒவ்வோர் உணர்ச்சியும் ஒவ்வொரு கிளர்ச்சியே கிளர்ச்சியைத் தளர்ச்சியாக்கவும் முயற்சியாக்கவும் நிதானம் தேவை.

159 வாய் வாழ உதவும் முக்கிய கருவி. உணவு, பேச்சு.

160 எந்தச் சூழ்ச்சியும் மனிதன் அறிவால் கண்ணால் ஏற்படுத்தியதே. ஆகவே மனித அறிவுக்கும், கண்ணுக்கும் அது தெரிந்துவிடும்.

161 ஆபத்தில் சிக்கிய ஒருவனுக்கு உதவி செய்யு முன் சிந்தித்துச் செய்ய வேண்டும்.

162 உபகாரம் செய்தவனுக்குப் பெரும்பாலும் அதைப் பெற்றவனால் அபகாரமே. காரணம், நன்றி உள்ளவர்கள் மனித இனத்தில் குறைவு!

163 தான் தவறு செய்யாமல் இருந்து கொண்டு, மற்றவனைத் தவறு செய்ய வேண்டாம் என்பது சரியே. தான் தவறு செய்து, மற்றவனைத் தவறு செய்யாதே என்பதும் சரியே.

164 நாம் தவறு பண்ணாமல் இருப்பதுதான் அறிவுடைமை.

165 புகழ், பணம் ஆகியவற்றை மனைவி, மக்கட்குச் சம்பாதிப்பதில்லை. தனக்குத்தான்!

166 அநீதி, பிறருக்கு இழைக்கப்படுகையில், பிறர் அனுபவிக்கையில் நமக்குத்தெரிவதில்லை. நமக்கு நடக்கும் பொழுது பெரிதாக அறியப்பட்டு அங்கலாய்க்கிறோம்.

167 கண்ணாடியை யாரும் பார்ப்பதில்லை. தங்கள் முகத்தைத்தான் பார்க்கிறார்கள்!

168 சாகின்ற மனிதன் செய்கின்ற சாகசங்கள் அதிகம்!

169 ஆஸ்துமா ஒரு அதிசய வியாதி. இறப்பதுதான் உறுதி என்றாலும், மனிதன் மறதியால் அதை நினைப்ப தில்லை. அதைவிட ஆஸ்துமா மனிதனுடன் இருக்கிறது. அதை இவன் அது வராத சமயம் மறந்தே விடுகிறான்.

170 வாழ்க்கையை, நாளை செம்மைப்படுத்திக் கொள்வோம் என்பதை விடச் செம்மையாக வாழ்வது தான் நலம்.

171 வாழ்க்கையை முடிந்தவரை இன்ப மயமாக்கிக் கொள்ள வேண்டும்.

172 பலவற்றில் எனக்குத் தொடர்பு உண்டு. அனேகமாக எதையும் தொடர்வதில்லை.

173 பலவற்றைப் பற்றிச் சிலவாவது அறிந்திருப்பது நல்லது.

174 பொது அறிவு இருந்தால் வாழ்வது சுலபம். ஒன்றில் எவ்வளவு அறிவு இருப்பினும் பொதுவாக வாழ்க்கைக்கு உதவாது.

175 குறளுக்குப் பொருள் காண நல்ல தமிழ் அறிவு தேவை. புலவர்கள் உரையில் கருத்து வேறுபாடு காணப் படுகிறது. உள்ளங்கை நெல்லிக்கனி போன்று அனை வருக்கும் புரியும்படி அமையும் அறமொழி வாக்கியங்கள் சாலவும் சிறந்தன.

176 மிக்க சிரமத்துடன் மிக்க வசதி அடைவதை விடக் கொஞ்சம் சிரமம் கொஞ்சம் வசதி மேல். சிரம மில்லா வசதிதான் வசதி!

177 ஆடை அணிகள் அதிகம் அணிவதும் சுமப்ப தற்கே. (சுமைதான்)

178 பணக்காரனாக இருப்பதை விடப் பண்பாள னாக இருப்பதே மேல்.

179 பலசாலியாக இருப்பதைவிடப் புத்திசாலியாக இருப்பது அவசியம்.

180 இயற்கையின் அமைப்பில் மென்காற்று ஒன்று போதாதா சுகத்திற்கு?

181 நான் நிறைவான வாழ்வு வாழ்கிறேன்!

182 இயற்கையின் மென்மைத்தன்மைகளை மனிதன் ருசித்து அனுபவிக்க வேண்டும் அதற்குத் தானே உணர்வு உள்ளது.

183 ஒருவன் பணத்தைச் சம்பாதிக்கும் பொழுதை விட அவன்அதை நல்ல காரியத்திற்குச் செலவு செய்யா மல் கருமித்தனமாக நடந்து கொள்ளும்போது, பிறர் வெறுப்பைச் சம்பாதித்துக் கொள்கிறான்.

சம்பாதிப்பது எவ்வளவு சரியோ. அதே போல் நியாயமாய்ச் செலவு செய்யவும் வேண்டும்.

வரவு செலவுதான் இயற்கை.

வரவு—செலவு—இருப்பு நியாயம். அதிக இருப்பு அநியாயம்.

வரவுக்குமேல் செலவு செய்பவன் முட்டாள்.

வரவுக்குச் சரியாகச் செலவு செய்பவனும் வாழத் தெரியாதவனே.

184 காசுக்குப் பீ தின்னுவதாகக் கூறுகிறார்கள். பீ தின்னுபவர்கட்கு எல்லாம் காசு கிடைக்குமா?

185 யாரையும் இலட்சியம் செய்யாமல் இருக்கலாம். ஆனால், யாரையும் அலட்சியம் செய்யக் கூடாது.

186 ஓய்வு பெற்றவர்கள், வளவள எனப் பேசுகிறார்கள். அதிலும் கடந்தவைகளை; காரணம், எதிர்காலச் சிந்தனையில்-உடல் தளர்வால்-நம்பிக்கை இன்மையால்.

187 ஓய்வு பெற்றவர் வாழ்க்கை, முடிந்த மாதிரி. உத்யோக மட்டில் இல்லை. வாழ்க்கையிலும் கொஞ்சம் நாட்களையாகினும் சாந்தமாய், அமைதியாய், தனிமையில், பிறருக்குச் சிரமம் கொடாமல் கடந்தவைகளைப் பாடமாக நினைத்து இயற்கையில் நிலைத்து நிற்க வேண்டும்.

188 விகாரம், ஒன்றை அதிக அழகானதாகப் பார்க்க விரும்புவதால் தோன்றுவது.

189 எதையும் முழுதும் அனுபவித்து விட்டால் வெறுப்பு வரும். அதனால், எதையும் அளவோடு அனுபவித்து வந்தால் நல்லது. ஆகவேதான் பெரியவர்கள், 'வாழ்வு வந்தாலும் அதை வைத்துப் பார்க்கனும்' என்கின்றனர்.

190 கழி, குத்து, கராத்தே கற்றுக் கொடுக்கிறோம். மனிதனை நேசிக்க எங்கும் பள்ளியோ, பயிற்சியோ, இல்லை.

191 சிலர் பொருள் வாங்குகையில் அவர்கள் பொருளைக் கவனிப்பது, பொருளை உற்பத்தி செய்யும் சிரமம் போல் உள்ளது. வாங்குவோர்க்கு வியர்க்கிறது!

192 சொல்லும், செயலும் ஒன்றுபடும்போது ஒரு முழுமை உண்டாகிறது.

193 சொல்லும், செயலும் வேறுபடும்போது இரண்டும் மூளியாகின்றன.

194 ஒருவனுக்குத் தொல்லை கொடுக்கையில், தொல்லையை அனுபவிப்பவனுக்கும் தொல்லை, அதனை

ஏற்படுத்தியவனுக்கும் அது தொல்லைதான். ஆகவே இரண்டும் வேண்டா.

195 பாராட்டுதலை அனைவரும் விரும்புவர், பாராட்டுதலுக்காகப் பணி செய்யக் கூடாது. செய்கின்ற வேலையைப் பொறுத்துப் பாராட்டுதல் கிடைக்க வேண்டும்.

196 உன் மேல் வரும் அவதூறுகளை அணைத்து விடு. இல்லையேல் அந்த நபர்களை அணைத்துக் கொள்.

197 காற்று, மழை, நதி, கடல், மணம் அனைத்தும் நமக்காக வருவதில்லை. ஆனால் நாம் அவைகளை அவைவரும் சமயம் அணுகி அனுபவித்துக் கொள்ள வேண்டும்.

198 அதிகாலையும், இரவும் மிகவும் அமைதியாக இருப்பது போன்று தெரிகிறது. அதுவல்ல உண்மை. வானமும், பூமியும் அமைதியாகவே உள்ளன. மனிதன் தான் அமைதியைக் குலைத்துக் கொள்கிறான்.

199 ஆசை இருக்கலாம். அது நிறைவேற அலைச்சலும், ஆவேசமும் கூடாது. நிதானமான முயற்சி தேவை.

200 அப்படி, இப்படி எல்லாம் வாழ வேண்டும் என நினைக்கலாம். அப்படி எல்லாம் வாழ முடியவில்லையே என்று ஏங்கக் கூடாது.

எப்படி எல்லாம் வரழலாம் என்று முயலலாம். அதே வேலையாக அமையக் கூடாது.

எப்படி வாழ்ந்தாலும் ஒன்றுதான். மன அமைதியோடு உள்ளதை உணர்ந்து மகிழ்ந்து அதனுடன் இன்புற்று முழு வாழ்வு வாழ வேண்டும்.

வாழ்க்கை என்பது வெற்றிகள் மட்டுமல்ல. நினைப் பதை முடிப்பது, தோல்விகள், நினைவுகள் நிறை வேறாமை, பல தொல்லைகள், சங்கடங்கள் கலந்ததே. அனைத்தையும் பழக வேண்டும்.

201 சிலருக்குப் பல தெரியும். சிலருக்குச் சில நன்கு புரியும். அதனை வாழ்வில் கடைப்பிடித்து நடந்து காட்டி வாழ்வது இல்லை.

விஷயங்களை அனுபவித்து ரசிப்பது ஓர் இன்பம்.

202 இன்பம் என்பது அனைவருக்கும் ஒன்றாகப் பொதுவாக இருப்பதில்லை. ஒவ்வொருக்கும் ஒவ்வொன்று இன்பமாக இருக்கும்.

203 துன்பமும் பலவகை. அனேகருக்கு அனேக வகை.

நோய் உடல் துன்பங்கள் ஒன்றாக இருக்கலாம். மனத் துன்பங்கள் மாறுபட்டவை.

204 ஒருவனைக் காட்டி ஒருவன் வாழலாம். ஒருவனைக் காட்டிக் கொடுத்து ஒருவன் வாழக் கூடாது.

205 நம்முடைய நேர்மை, நாணயம், ஒழுக்கம், அச்ச மின்மை மற்றவர்களை ஈர்க்கும்; நம்மிடம் மரியாதை கொடுக்கச் செய்யும்.

206 கிழக்குடல் அலைவது: கிழ மனது திடமாக மேலும் வாழ நல்லவைகளை ஆகாரத்தை உட்கொள்ள விழைவதால் ஏற்படுகிறது.

207 டாக்டர்கள் உயிர்களைக் காப்பாற்றுகிறார்கள். உயிரைக் காப்பதே முதல் வேலை. எழுத்தாளன் உயி ரோடு இருப்பவரைக் காப்பாற்றுகிறான்.

208 கல்லூரி ஆசிரியர்களாக இருப்பது சர்கசில் மிருகங்களை நடத்தும் Ring Master வேலையாக இருக்கிறது, இக் காலத்தில்.

209 என் உடல் நலத் திடமின்மை என் முன்னேற்றத்தைப் பாதிக்கிறது. அதே சமயம், யோக்கியதையை வளர்க்கிறது.

210 முன்னேற்றத்திற்கான காரியங்கள் நிலை பெற உதவுவதில்லை; நிலை பெற உதவும் செயல்கள் முன்னேற்றத்திற்கு உதவுவதில்லை.

211 நம் சிரமத்தை யாரேனும் ஏற்றால் நமக்கு இன்பம். ஒருவன் நடக்காமல் ரிக்ஷாவில் போவது அவனுக்கு இன்பம். ஆனால், இழுப்பவனுக்குத் துன்பம்.

212 பெண்கள் ஆங்கிலம் நன்றாகப் பேசுகிறார்கள். ஆண்களைவிட இனிமையாகவும் பேசுகிறார்கள். சரளமாகவும் பேசுகிறார்கள்.

213 வல்லவன் வாழ்வான். நல்லவன் வாடுவான். வாழ்வு வல்லவனுக்குத்தான் போலும்!

214 பன்றி மலம் உண்கிறது? மனிதன் பன்றியையே உண்கிறான். இதில் எது அருவருப்பு?

215 வசதி படைத்தவள், காம வேட்கையால், சோரம் போகிறாள். நடுத்தரக் குடும்பத்தினர், பணத் தேவைக்கும் பகட்டுக்கும் விபச்சாரம் செய்கிறாள். ஏழை, சோற்றுக்கு விலை போகிறாள்.

216 பருமனான உடல் இளைக்கப் பட்டினி கிடப்பது கூடப் பலன் அளிப்பதில்லை. ஆனால், பெரும் மனக் கவலை ஏற்படின் இளைத்துவிடும்.

217 பொய் வெற்றி பெறலாம். மெய் தோல்வி அடையலாம். தோல்வியுற்றாலும் மெய் நிலைத்து நிற்கும்.

218 மனிதன் அழிகின்ற மனிதனை நம்புவதில்லை. நிலம், வீடு, தோப்புகளையே நம்புகிறான். இவை இவனைக் காட்டிலும் நீண்ட நாள் இருக்கும். எனவே அதையே நம்புகிறான்.

219 குடியர், கூத்தியர்; சூதாட்டக்காரர், திருடர் கூட ஒற்றுமையாக இருப்பார்கள். ஆனால், அறிவாளி கள் ஒற்றுமையாக இரார்.

220 நல்ல வசதி என்கிறார்கள். அது என்ன? நிறைய நிலம், வீடு, பணம் இவைதான். யாரும் நல்ல அறிவா, நல்ல ஒழுக்கமா, நல்ல உடல் நலமா, நல்ல கலை ஞானமா எனக் கேட்பதில்லை. வசதி என்பது பணம். அதுவே உலகம் ஆகிறது.

221 நேற்று அவசியம் என்ற ஒன்று, இன்று அனாவசியமாகலாம்.

இன்று தேவை அல்லாத ஒன்று, நாளைக்கு மிகவும் தேவையான ஒன்றாகவும் இருக்கும்.

222 மனிதன் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கிறான். அதைக் காப்பாற்ற மேலும் கஷ்டப்படுகிறான். அவனுக் குப்பின் அந்தச் சொத்து என்ன ஆகும் என்று மேலும் கஷ்டப்படுகிறான்.

223 அறிவாளிகள் ஆற்றும் கடமைகள் சிலருக்கு மடமையாகத் தோன்றும்.

224 வயதானவர்கட்குப் பெரும்பாலும் உடல் தளர்ந் தாலும் உள்ளம் தளராமல் எண்ணத்தின் திண்மை

அதிகப்பட்டுப் பலப்படுகிறது. இது வைரம் பாய்வது போன்றது.

வயதானவர்களின் நற்பண்புகள் வைரம் பாயின் நன்மையே. தீமைகளும் அப்படியே வளர்வதால்தான் சிரமப்படுகின்றனர்.

225 இளைஞர்கள், வயதானவர்கள் விட்டுக் கொடுத்துப் போனால் என்ன என்று எண்ணுகிறார்கள். ஆனால், வயதானவர்கள், 'இளைஞர்களைவிட எத்தனையோ ஆண்டு நாம் விடாப் பிடியாக இந்தக் கருத்தில் ஊறி இருக்கிறோம். அதனால், நாம் விட்டுக் கொடுக்கக் கூடாது. இளைஞர்கள் வயதில் இளையவர்கள். அதனால், கருத்தின் வயது சிறியது. அவர்களே விட்டுக் கொடுக்கட்டும்' என்று எண்ணுகிறார்கள்.

226 நல்ல பழக்க வழக்கங்கள் ஏன் பிறந்தன தெரியுமா? அறிவாளிகள் பக்கமாக முட்டாள்கள் நெருங்காமல் இருக்கத்தான்.

227 வயோதிகம் தனக்கே ஒரு சுமை. பிறருக்கு அது ஒரு பெரும் சுமை.

228 நோயற்ற வயோதிகம் ஒரு பெரும் சொத்து.

229 மரம் சென்று உதவி செய்வதில்லை. அது இருந்த இடத்திலேயே இருந்து கொண்டு நிழல், காய், கனி, இலைகள் கொடுப்பதுபோல நம்மிடம் வருவோருக்கு உதவினாலே போதும்.

230 ஒருவர் ஏன் எல்லோருமே, எப்பொழுதுமே கடுகடுப்பாய் முகத்தைச் சுருக்கிக் கொண்டு இருக்க முடியாது.

231 ஒழுக்கத்துடனும், நேர்மையாகவும், உண்மையாகவும், முடிந்த அளவு பிறருக்கு உதவி செய்து வாழ்ப

வர்களை, அறிஞர்களும், பணக்காரர்களும்கூட மதிக்கின்றனர்.

232 நான் என் காரியங்களைச் சாதித்துக் கொள்ள யாரிடமும் அவசரப்பட்டதும் இல்லை. அவர்களுக்கு ஒரு மயிரிழை கூட ஊறு விளைவித்ததில்லை. அவர்கள் மனம் கோணவும் நடந்து கொண்டதில்லை.

233 வேலையில்லாத நபரைச் சந்திப்பது மிகவும் சிரமம். காரணம், குறிப்பான இடத்தில் இருக்க அவசியம் இல்லை. வேலையில் உள்ளவர்களைச் சந்திப்பது சுலபம்.

234 மனிதன் பிறரை ஏமாற்றி விட்டாலும், செய்த தவறில் இருந்து தப்பித்துக் கொண்டாலும் பெரும் சந்தோஷம் அடைகிறான். ஏமாற்றியதும் தப்பித்துக் கொண்டதும் மற்றொரு நாள் துன்பம் விளைவிக்குமென நினைப்பதே இல்லை. துன்பம் தொடரும். இன்பம் தொடர்வது இல்லை. ஆகையினால், துன்பம் விளைவிக்கும் செயல்களைச் செய்யக் கூடாது.

235 ஓய்வு, வேலையில் இருந்து மட்டுமல்ல, குடும்ப வேலைகளில் இருந்தும் ஒதுங்கி இருப்பது ஒரு உயிருக்கு உண்மையான சுதந்திரம்.

236 வக்கீல்கட்குக் கேஸ் தோற்றாலும் பீஸ் உண்டு. டாக்டர்களுக்கு கேஸ் மரித்தாலும் பீஸ் உண்டு.

237 சந்நியாசிக்குச் சம்பாதிக்கத் தெரியாது. சம்பாதிக்கத் தெரியாமல்தான் சந்நியாசி ஆகிறான்.

சந்நியாசிக்குத் தான் வாழக் கொஞ்ச வசதிகளே போதும். பிறரைப் பற்றி நினைப்பதில்லை அவர்.

238 ஜிப்மர் மருத்துவ மனையில் பலவித வியாதியஸ்தர்களைக் காணும்பொழுது நாம் நல்ல நிலையில்

விரைவில் செத்துவிடலாம் என்ற நினைவு வருகிறது. காரணம், அவ்வளவு பயங்கரமான கொடிய வியாதிகள் மனிதனை விரட்டுகின்றன.

239 மனிதனுக்கு வரும் பிணிகள் அவனைப் பற்றிச் சிந்திக்கவும், இறையைச் சிந்திக்கவும் பேருதவியாக அமைந்துள்ளன.

240 சிறை, சமூக விரோதிகளுக்குத் தண்டனை. மருத்துவமனை, தன் உடலுக்குத் தீங்கு செய்தவனுக்கும், உடலைக் கவனித்துக் கொள்ளாதவனுக்கும் தண்டனை.

241 வயதான ஓய்வுக் காலத்திலும், பணம், பதவிகள் இருந்தால் அனைவரும் விரும்புவர். ஏன்? காரியம் நடக்கும், ஏதேனும் கிடைக்கும் என்றுதான்.

242 ஓடி ஆடி உழைக்கும் பருவம் வரை, 'இவனால் ஏதேனும் செய்ய முடியும் நமக்கு உதவுவான்' என்றுதான் மற்றவர்கள் மதிக்கின்றனர்; விரும்புகின்றனர்.

243 வயதானவர்களின் ஆலோசனைகளை யாரும் கேட்பதில்லை. அனுபவமுள்ள யோசனைகளைக் கேட்பது மிகவும் நல்லது.

244 வயது வந்த பிள்ளைகள், தாய், தந்தையர் மனம் நோகும்படி நடந்து கொள்வது பிள்ளைகளைப் பாதிக்கும்.

245 திருடர்கள் மத்தியில், திருடாதவன், திருடன் ஆக்கப் படுவான்!

246 பிறர் மதிக்க மிகவும் சிரமப்பட்டும், சில சமயங்களில் மனசாட்சியை விட்டும், அசிங்கப்பட்டும், பணம் சேர்க்கின்றனர். அப்பொழுதுகூட அறிவாளிகளும், யோக்

கியர்களும், நேர்மையாளர்களும், அந்தப் பணம் படைத்தோரை மதிப்பதில்லை.

247 'அரிதரிது மானிடராய்ப் பிறத்தல்' இது முதுமொழி. என்மொழி: அதனினும் அரிது மனிதனாய் வாழ்தல்.

248 நோயாளிக்குத் துணையாக ஒருவர் இருப்பது மிகவும் சிரமம்.

249 என் பெரிய மகன், அவன் எனக்குக் கடிதம் எழுதும் போது, 'கண் கலங்கினேன்' என்று எழுதினான். நான் அதைப் படிக்கும் போது அழுதே விட்டேன்!

250 அவர் அவர் அளவுக்கு அதிகமாகச் சில மனிதர் செய்துள்ளார்கள். அதைப் பெரிதாகவும் பேசுகிறார்கள். இது சரிதான்.

251 தவற்றை மனிதன் உணர வேண்டும். உணர்வதே சிரமம். தவற்றை உணர்ந்தபின் நீக்கிக் கொள்ளவும் வேண்டும், உணர்ந்தால் மட்டும் போதாது.

252 உழைப்பாளி சுகம் பெற்றால் வரப்பேறிப் போக மாட்டான். மிகவும் உண்மை, எப்படி இறுமாப்பும் திமிரும் வருகிறதோ!

253 ஆண்டவன் என்னை மிகவும் சுகமாகவும், செல்லமாகவும், சகல வசதியோடும் வாழவைத்துள்ளான். அதனால்தான் என்னால் சிறு இடையூறுகளைக் கூடத் தாங்க முடிவது இல்லை.

254 எல்லோரும் எல்லோருக்கும் தைரியம் கூறுவார்கள். அவர்கட்குத் துன்பம், தொல்லை வரும் சமயம், எல்லோரும் அச்சப்படுவார்கள். இதுதான் இயற்கை.

255 கஷ்டப்பட்டுச் சம்பாதித்தவனைப் பெரும்பாலும் குடும்பத்தினர் பாராட்டுவதில்லை. தூஷணையே செய்கின்றனர்!

256 நாம் பலரைக் கேள்வி கேட்கலாம். எளிது. ஆனால், நம்மை யாரும் கேள்விகள் கேட்காமல் நடந்து கொள்வது கடினம்.

257 வேட்டியைக் கரை பார்த்து எடுப்பதோடு சரி. பின்னர், இவனும் பார்ப்பதில்லை! பிறரும் பார்ப்பதில்லை!

258 பிள்ளைகளுக்குத் தேவை யில்லாதவைகளை நாம் நம் ஆசைக்காக அணிவிப்பதைவிடக் குழந்தைகளின் தேவை அறிந்து அணிவிப்பதுதான் நியாயமானது.

259 சும்மா இருக்கையில், மனம், பலதை நினைக்கிறது. அதைவிட ஒரு வேலையில் ஈடுபட்டால் மனம் அந்த வேலை ஒன்றில் மட்டும் ஈடுபடுகிறது.

260 பாடையை அலங்கரிப்பது மிகவும் வீண்.

261 ஒரு சாதாரண மனிதன் எந்தச் சிக்கலிலும் சிக்காமலும், தன் சொந்த வாழ்க்கையைக் கவனித்து, முடிந்தால் தேடி வருபவர்கட்கு உதவி செய்தும், வாழ்ந்து வருகையில் அவனுக்குப் பெரும்பான்மையினர் விரோதிகளாக இருக்கின்றனர்.

262 ஒருவன் ஒருவரால் மதிக்கப்படுவதைவிடப் பொறுமைக்குள்ளாவதே அதிகம்.

263 'யாரை நம்புவது' என்பதை நாம் தான் நிர்ணயிக்கவேண்டும். நாம் பலரை நம்புவது நம் குற்றமே. அவர்கள் குற்றமல்ல.

264 மனிதன் வாழத் திட்டமிடுகிறான். பெரும்பாலும் அப்படியே வாழுகிறான். ஆனால், அவன் சாகக் கடமைப்பட்டவன். சாவதற்குத் திட்டமிடுவதில்லை. அனேகமாக அவசியம் சாகவும் திட்டமிட்டுக்கொள்ளணும்.

265 உண்ணும் பொழுதும், மலம் கழிக்கும் பொழுதும் யார் தேடி வந்தாலும் தேடிவந்த விஷயம் மலம் கழிப்பவர்க்கும், உண்பவர்க்கும் அறிவிக்கப்படக் கூடாது. குளிக்கும் போதுகூட மேற்படி முறையைக் கைக்கொள்வது நலம்.

266 நில் — நிமிர்ந்து நில்!
சொல் — துணிந்து சொல்!

267 உண்ணும் போது நிதானமாக, அமைதியாக இருக்க வேண்டும். மலம் கழிக்கையில் அதனிலும் நிதானம், அமைதி சற்று அதிகம் இருப்பது நலம்.

268 உணவு உட்கொள்வதில் காட்டும் அக்கறையை விட, மலம் கழிப்பதில் அதிக அக்கறை காட்ட வேண்டும்.

269 உற்சாகமாக வேலை செய்ய வேண்டும். அதற்கேற்ப அமைதியாக ஓய்வு கொள்ள வேண்டும்.

270 பிறர் உடம்பு துடைக்க ஆடை கொடுத்தால் உடம்பிலுள்ள தண்ணீரை மட்டும் துடைத்துக் கொள்ள வேண்டும். நமது ஆடையாயின் உடம்பைத் துடைத்துக் கொள்ள வேண்டும்.

271 ஏழைகட்குப் பெரும்பாலும் வியாதி குறைவு. காரணம், வறுமை கொடிய வியாதி! தனவந்தனுக்கு வியாதியின்மையும், ஏழைக்கு வியாதியும் கொடுமை.

272 பணக்காரன் ஏழையை மதிப்பதில்லை. ஆனால், ஏழை பணக்காரனை மதிக்கிறான்.

5

273 பெண் நினைத்தால், மனம் வைத்தால், பல நல்ல காரியங்களைச் செய்யலாம். பெண் மானத்தை விட்டால் எந்தக் காரியத்தையும் சாதிக்கலாம்.

274 ஏழை, சிரமப்பட்டு முன்னேறி வசதியடைந் தால், ஏழையும், அவனை வேறு கண்கொண்டு பார்க் கிறான். பணக்காரனும் நம்போலாகிவிட்டானே என்று தவறாகப் பார்க்கிறான்.

275 பெரியவர்கள், சிறியவர்களும், பெரியவர் களாகிக் கொண்டு வருகிறார்கள் என்பதை உணர்வ தில்லை.

276 மனச்சிக்கல் உயிரை மாய்க்கும், மலச்சிக்கல் உடலைச் சாய்க்கும்.

277 என் தந்தையின் போலீஸ் எண் H.C 910.

278 எதையும் இழப்பது மிகவும் சுலபம். அதைச் சேர்ப்பதுதான் மிகவும் சிரமம்.

279 உழும் காலத்தே ஊர்சுற்றி, அறுக்கும் காலத்தே அரிவாள் கொண்டு செல்வது பயன் தராது. இருப்பினும், அப்பொழுதும் ஊர் சுற்றக் கூடாது.

280 மாணவன் கேள்வி கேட்க வேண்டும். மாணவ னைக் கேள்வி கேட்கக் கூடாது.

281 படிப்பில் மாணவன் துடிப்பாக இருக்கவேண்டும். படிப்பு அவனுக்கு கிடிப்பாக இருக்கக் கூடாது.

282 மாணவன் கற்க வேண்டும். மாணவனுக்குக் கற்பிக்கக் கூடாது.

283 விருந்து, மருந்து மூன்று நாள். அல்லது மூன்று வேளை. இது அந்தக் காலம், விருந்து, மருந்து ஒரு வேளை அல்லது ஒரு நாள். இது இந்தக் காலம்.

284 சிறிய குழந்தைகள் கூடத் தீங்கை எளியவர் களிடம் செய்கிறது.

285 இறந்த பின்னாலும்கூடச் சமாதிக்கும், சிலைக் கும் காவல் தேவைப் படுகிறது இந்தக் காலத்தில்.

286 நடிப்பது என்பது சிரமம்தான்.

287 அஞ்சி அஞ்சி அஞ்சாமல் வாழ வேண்டும். அஞ்சி யும் வாழ வேண்டும். அஞ்சாமலும் வாழ வேண்டும்.

288 சில மனிதர்களை எவ்வளவு ஆண்டுகள் பழகினா லும் புரிந்து கொள்ள இயலாது. அவ்வளவு கொடிய எண்ணங்களையும் உள்ளடக்கி மேல் பூச்சுடன் இருக் கிறார்கள்.

289 ஊதியம் பெற உதவியவரை நாம் உள்ளளவும் மறக்கக் கூடாது.

290 இரயிலில் பிரயாணம் செய்கையில் சக பிரயாணி கள் உடன் பிரயாணம் செய்பவர்களிடம் அன்பாகவும், உதவி மனப்பான்மையுடனும் நடந்து கொள்கிறார்கள். அக்கம் பக்கத்தில் அப்படியில்லை. காரணம், சிறிது தூரம், சிறிது நேரம் என்பதால், அதைப் போலவே வாழ்க்கைப் பயணமும், சிறிது தூரம் என உணர்ந்தால் அன்பாகவே வாழ்வார்கள்.

291 மனிதன் நாணயத்தை எடைபோடக் கடன் கொடுத்துப் பார். மனிதனின் யோக்கியதையைத் தெரிந்து கொள்ள தனிமையில் ஒரு மங்கையை விட்டுப் பார்.

292 சிரிப்பு வரும் வார்த்தைகளைக் கூறினால் சிரிக்கிறார்கள். சிந்திக்க வைக்கும் வார்த்தைகளைக் கூறினால் இரசிப்பது இல்லை.

293 அச்சகம் வைக்க அவசியம் தமிழில் தேர்ச்சி பெற்ற ஒருவர், பிழை திருத்தம் செய்ய இருந்தால்தான் பதிவு செய்ய வேண்டும். மருந்துக் கடைக்குக் கம்பவுண்டர் போல! இல்லையேல், தமிழ்க் கொலை தவிர்க்க முடியாத தாகிவிடும்!

294 தொழிலாளி முதலாளியாகி ஒரு தொழில் ஸ்தாபனம் நடத்தினால் மற்றத் தொழிலாளிகளை வேலை வாங்குவது சிரமம். கட்டுப்பாடு இராது.

295 சில மனிதர்கள் உலகிலுள்ள எதைக் கண்டாலும் வெறுப்புணர்ச்சியுடன் பார்க்கிறார்கள். அவர்களுக்கு உலகம் கசப்பாகவே இருக்கும்!

296 பகுத்தறிவு படைத்த மனிதன் சுகமாக நிம்மதியாக, அமைதியாக, அல்லற்படாமல் வாழ வழி வகுத்துக் கொண்டு வாழ வேண்டும்.

297 பகுத்தறிவற்றவை என்று கூறப்பெறும் மிருகங்கள் தாம் அமைதியாக, கவலையின்றிப் பொறாமை, சூது, சூழ்ச்சியின்றி வாழ்கின்றன.

298 மனிதன் தானே வகுத்துக் கொண்ட வழிப்படி நடப்பதில்லை. ஆனால், மிருகங்கள் வகுத்துக்கொண்டோ வகுக்காமலோ ஒரு முறைப்படி வாழ்கின்றன.

299 Money purse should be a mini purse.



# கவர்ந்தவை

1 "ஈன்றாள் பசி காண்பாளாயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை"—குறள்.

2 "ஆகுக, ஆக்குக"—விவேகானந்தர்.

3 Don't worry be merry.

4 'ஏழைபடும்பாடு' என்ற திரைப்படம் நல்ல கருத்துடையது. நாகையா நடிப்புப் போற்றக் கூடியது. மனிதனை மாற்றும் கதை. கருத்துடைய மனிதனை இப்படத்தில் கடமையை விடக் கருணை பெரியதெனக் காட்டப்படுகிறது. கடமை மாய்ந்தது, கருணை முன்!

5 எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.—குறள்.

6 "Be a Health officer Don't be a doctor.

7 குற்றாலம் பார்த்தபின் செத்தாலும் சாகலாம்.

8 திருச்செந்தூருக்குத்தான் திரு சேர்த்தது நியாயம்.

9 குமரியைக் கண்ட பின் குருடானாலும் பரவாயில்லை. குமரி தரிசனம் அவ்வளவு மேன்மை! இன்பம்!

10 வாத்தியங்களில் நான் விரும்புவது வீணை. வீணை வாசிப்பவன் நிமிர்ந்தே உட்கார்ந்து மேனோக்குடன் வாசிப்பான்.

11 Love all, Trust a few, Hate none.

12 மைசூர் சாமுண்டீஸ்வரி மலைமேல் இருந்து நகரைப்பார்த்தால், நக்ஷத்திர மண்டலத்தில் நாம் இருப்பதாகத் தோன்றும்.

13 திப்பு சுல்தான் ஆண்டு மாண்ட ஸ்ரீரங்கப் பட்டணத்தில் வரும் காவேரியில் குளிக்கையில் ஜலத்தைத் தன்னையறியாமல் சாப்பிடத் தான் தோன்றுகிறது.

14 அரண்மனைவாயிலில் நடக்கையில் எந்தப்பிச்சைக் காரனுக்கும் கம்பீரமான நடைதான் வரும். அரண்மனைகளையும், தர்பார்களையும் பார்த்தால் அந்த அழகு கம்பீரம் இவற்றிற்கு மீண்டும் மன்னர்கள் ஆண்டாலும் தேவலை எனப்படுகிறது.

15 The result of the Past is the present.

16 சிக்கனமாக இருப்பதே ஏழைகளின் செல்வம் (சிங்கௌ பொன் மொழி)

17 Tunge is the enemy of the neek.

18 காலையில் வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால் கதிரவன் ஒளி எழும் சமயம் மேக மண்டலத்தில் தோன்றும் பல வண்ண ஜாலங்கள் மிகவும் அழகாக இருக்கும்.

19 யமுனைக் கரைக் கோட்டையில் இருந்து தாஜ் மகாலை ½ நாள் கூட பார்த்தால் தெவிட்டாது. ஆகாயம் பின்னணி அல்லவா?

20 கார்த்திகைமாத நிலவு மிக இனிமை. கார்த்திகை மாதத் தயிரும் மிக ருசி.

21 மரம், செடி, கொடிகள் காற்றினை அசைவில் ஆடுகையில், நானும், அவைகளுடன் சேர்ந்து காற்றை ரசித்து ஆடுவதாக நினைப்பேன்.

22 மரம், செடி, கொடிகளின் சிறிய கிளைகள் காற்றில் ஆடும். அவைகளில் உட்கார்ந்து ஊஞ்சலாட்டிக் கொள்ளும் பறவை இனங்களின் மகிழ்வில் நானும் பங்கு கொள்வேன்.

23 மரம், செடி, கொடிகள் அசைவற்றிருப்பதைக் கண்டு அதன் அமைதியை ரசிப்பேன். நானும் அவைகளுடன் அமைதியுறுவேன்.



# அரசியல்

1 கடமையைச் செய், உரிமை கிடைக்கும். 1942 முதல் வியாபாரி ஆனான் பெரிய விவசாயி.

2 ஏழை பணக்காரனை வெறுக்கிறான் என்றல்ல— ஏழை சமத்துவத்தை விரும்புகிறான் என்றுதான் பொருள்.

3 மனிதன் விரும்புவது உணவும் உடையும்தான். பணம் அல்ல.

4 இன்றுவரை எனக்குச் சாதிப்பற்று கிடையாது. எந்தச் சாதியைக் குறித்தும் இழிவாகப் பேசினால் என் மனம் வேதனை அடையும். கட்டாயக் கலப்பு மணத்தால் சாதிபேதம் போகும்.

5 தேர்தலில் இன்றைய நபர்கள் தமக்கு ஓட்டு செய்யாதவர்களைத் திட்டுகிறார்கள். விரோதமாய் எண்ணுகிறார்கள். பெரும் முட்டாள்தனம்! நட்பு வேறு, ஓட்டு வேறு. நண்பனாய் இருப்பதனால்தான் இவன் அதற்குத் தகுதி அல்ல என முடிவுகட்டி அடுத்தவனுக்கு ஓட்டு செய்தது. நிற்பவன் இதை உணராது தனக்கு ஓட்டு செய்யாதவனைக் குற்றவாளி என நினைக்கிறான். என்ன அறியாமை!

6 ஓட்டு போடுபவன், நேராக ‘உம்மை இத் தேர்தல் சம்பந்தமாய் நான் வெறுக்கிறேன் உனக்கு ஓட்டு செய்ய

முடியாது'' எனத் தெளிவாய்ப் பறை சாற்றலாம். அல்லது, ''என் இஷ்டப்படி, எனக்கு எப்படி அப்பொழுது தோன்றுகிறதோ, அப்படிச் செய்வேன்'' எனச் சொல்ல லாம்.

7 கற்பனைக் கட்டுரைகள் எழுதுபவன் பெரும் பாலும் ஏழையாக இருப்பான். அவனால்தான் ஏழ்மை யின் தாழ்மையை உணர்த்தியும், பணக்காரனின் நிலையை எண்ணி உயர்த்தியும் சித்தரித்துப் புரட்சிகரமாய் எழுத முடியும்.

8 நடுநாயகமாய் இருப்பது இக்காலத்தில் இருபுறமும் இடியாய் முடிகிறது. அக்காலத்தில் இந்நிலைக்கு இரு புறமும் கவுரவம். இக்காலத்தில் ஒருபுறம் சார்தலே மேல்.

9 கிருபளானி கட்சியைக் கலைத்தது பெருங்குற்றம். கலைக்க வைத்தது ராஜதந்திரமின்மை. இது என் கருத்து.

10 என் ஆட்சியில் லஞ்சம் கொடுத்தவனுக்குத் தூக்குத் தண்டனை அளிக்கப்படும்.

11 சிந்தனை பேனா முனையுடன் நில்லாமல் செய லிம் சேர்த்து நடாத்த வேண்டும்.

12 பலநாள் ஒருவனுக்குச் சோறு போடுவதைவிட அவனைச் சோற்றுக்குச் சம்பாதிக்க வழி செய்தல் மேலானது.

13 பணக்காரன் ஏழைக்கு அடிமை; ஏழை பணத் துக்கு அடிமை. இருவருக்கு மட்டுமல்ல யாவருக்கும் பொது 'உழைப்பு'.

14 பெண்கள் எந்த அரசியல் கட்சிகளிலும் சேர லாகாது. என் கருத்து, இது.

15 மிருகங்களின் மேல் மனிதன் சவாரி செய்வது (தன்நல) இயற்கை. மனிதனாகிய பணக்காரன் மனித

னாகிய ஏழை மேல் சவாரி செய்வது தவறு. தவறில்லை என்கிறது இன்றைய ரிக்ஷா வண்டி.

16 உலகயுத்தம் — அமெரிக்கா அல்லது ருசியா; கொஞ்ச காலம் உலக மண் எல்லாம் ஒரு கொடியின் கீழ் இருக்கும்.

17 பணத்தின் மதிப்புப் பாழ்பட்டுப் பண்டங்களின் பரிமாறல் ஏற்பட வேண்டும்.

18 மனிதனோ மூளையோ இன்றைய இந்தியா இல்லை. பணம் இன்றைய இந்தியா; பணம் நடத்து கிறது, மனிதனை!

19 பண ஆட்சியை ஒழிக்கக் குண ஆட்சியை ஓங்க வைக்க வேண்டும்.

20 பண மில்லாதவன் பிணம் என்கின்றனர். இப்பொழுது பிணமல்ல, நடைப்பிணம். ஆனால், சீக்கிரத் தில் பணம் உடையவன் பிணமாவான்.

21 ஓரிடத்தில் பணம் ஒன்று சேர்ந்ததால் ஒற்றுமை யாய் ஆதிக்கம்செலுத்துகிறது. குவியல், பரவல் முறையில் அவை பிரிக்கப்பட்டால் நாம் அதை ஆளலாம்.

22 பணமும், குணமும் சேர்ந்து இருப்பதில்லை. காரணம் இரண்டும் விரோதிகள். இரண்டும் சேர்ந்து இருப்பது போல் சில இடங்களில் தெரியும்.

23 நாடு பிடிப்பதன்காரணம், உலகம் மண். மண்தான் யாவும். மனிதனுக்கு வேண்டியதெல்லாம் மண்ணிலே. ஆகையால்தான், மண்ணுக்குச் சண்டை உயிரைவிட்டுக் கூட!

24 தற்கொலையைத் தடுப்பதும், தண்டிப்பதும் மடத்தனம். தற்கொலை ஏற்படுவது ஆட்சியின் குறையே பெரும்பான்மை.

25 பொதுவாகக் காங்கிரசைப் பலக் குறைவாக்கியது வீரமான்யம்தான். காங்கிரசைக் கலைத்திருக்க வேண்டும். அல்லது காங்கிரஸ்காரன் பதவிக்குச் சென்றிருக்கக் கூடாது. இரண்டும் நடக்கவில்லை. அதனால் இரண்டுக்கும் கெட்ட பெயர்.

26 என் ராஜாஜி அங்கிருந்து தமிழ் நாட்டை அடையக் காரணம், நேரு அவர்களின் எதேச்சதிகாரம் பிடிக்கவில்லை; தனது கருத்துக்களுக்கு நல்ல இடம் தர வில்லை என்ற காரணமே என எண்ணுகிறேன்.

27 "மாஜி M.L.A; M. P; எனப் பலர் போட்டுக் கொள்வார்கள். அதற்கு நான், 'மாஜி சுமங்கிலி' என்பது தான் பொருள் என்கிறேன்.

28 பார்ப்பனர் உயர்ந்த காலம் போய் ஆதி திராவிடர் உயர்கிற காலம். அதாவது சக்கரம் ஒரு சுற்று சுற்றி விட்டது.

29 பதவிக்குப் போனபின் அவர்கள் சாதரணர் என்பதை உணர்வதில்லை. பதவி முடியும் வரைக் காத்திருக்க வேண்டியிருக்கிறது. பின்னர்தான் தாழ்வு. முன் சமத்துவம். இடையில் உச்சநிலை. கடைசியில் கடை நிலை. உச்சியில்தான் ஜாக்கிரதை தேவை. உயர்ந்த இடம்!

30 உச்சிக்குப் போய் விட்டால் உச்சியில் இருக்க வேண்டும். பிடித்திருந்தால் இருக்க வேண்டும். ஆசை தீர்ந்துவிட்டால் அல்லது கடமை முடிந்து விட்டால் இறங்கிவிட வேண்டும். அதை விட்டு விழுந்துவிடக் கூடாது. அதைவிடத் தள்ளப்படக்கூடாது.

31 மந்திரியாக வருவது சுலபம். ஆனால், குறிப்பிட்ட படிப்பின்றிச் சாதாரண குமஸ்தாவாக வருவதுகூட கடினம்.

32 அந்தக் கால உயர்ந்த கோயில், கருமியாக இருக்கும். பணக்காரன் அல்லது மன்னன் அல்லது தனவந்தன் இவர்களின் தனிச்சொத்தைப் பொது உடமை ஆக்க, ஆண்டவன் பேரில் நல்லது ஏற்படுமென்ற நம்பிக்கையில், வேலையற்றிருக்கும் தொழிலாளிகட்கு வேலை கொடுத்து உழைப்பைக் கலை மூலம் உருவாக்கி நிறுத்தியவைகளே இன்று பலபடப் பேசித் தனிச் சொத்தைப் பொதுச் சொத்தாக்க வழியின்றி வழி தவறி விட்டது உலகம்.

33 1951 பொதுத் தேர்தல்: 'எல்லாருக்கும் சம அந்தஸ்து என்பதன் அடையாளம், எல்லோருக்கும் ஒட்டுரிமை' என்று மகிழ்ந்தேன். நடத்தையில் பெரும் பணக்காரருக்குத்தான் என்பது ஊர்ஜிதம் செய்யப் பட்டது. ஏமாற்றம்!

34 பணம் ஓரிடத்தில் தேங்குவது உழைத்தவர்கள் உழைப்புக்குத் தக்க ஊதியம் அனுபவிக்காமல் இருப்பது.

35 பெரும்பான்மை பணக்காரர்கட்கு ஏழைகளின் நிலை தெரிவதே இல்லை.

36 வீட்டுக்கு ஒரு நல்ல முகம் பார்க்கும் கண்ணாடி எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் நாட்டுக்கு ஒரு நல்ல எதிர்க்கட்சி இருப்பது.

37 ஒருவன் நமக்கு விரோதியாகிறான், பொது நலத்தில் என்றால் ஆகட்டும். சுயநலத்தில் கை வைத்தால் விரோதம் வேண்டாம் என்று விட்டு விடுவோமா? சுய நலத்திற்கு ஒரு நீதி, புறத்தியாருக்கு ஒரு நீதியா? வேண்டாம். நியாயத்தைச் சொல். எதுவரினும் வரட்டும்.

38 ஒருவருக்குச் சிபாரிசு செய்வதைவிடப் பிச்சை எடுப்பது சற்றுச் சுலபம்.

39 அதிகச் செல்வாக்குள்ள பெரிய மனிதர்கள் சொன்னபடி நடந்து கொள்ள முடிவதில்லை. ஆனால், அவசியம் நடந்து கொள்ள வேண்டும்.

40 கட்சி, பட்சியைப் போன்றது. பறந்துவிடும்;

41 இன்றைய உலகம் நாய்வால் போன்றது. எந்தச் சீர்திருத்தவாதியும் பிடித்துக் கொண்டிருக்கும் வரை நேராக இருக்கும். விட்டதும் மடக்கிக் கொள்ளும்.

42 புல் விற்கும் பெண்களை வாங்கும் கசடர்கள் திட்டுகின்றனர். அதிகக் கேவலமாகப் பின் அவர்களையே தூக்கி வரச் சொல்கின்றனர். நான் கடை வைத்துப் புல்லை எடை போட்டுப் பெற்று விற்றால் ஹரிஜன சேவையாகவும் சீர்திருத்தமாகவும் விளங்கும்.

43 அரசியல் எந்த நல்லவனையும் கெடுக்கும், அதற்கு முன் மக்கள் அவனைக் கெடுத்து விடுவார்கள்!

44 அரசியலில் அன்புகாட்டும் நண்பர்கள் உண்மையில் உனக்குத் தீங்கிழைப்பவர்கள்.

45 கடைசியாக மனிதன் முன்னேற வேண்டிய பாதை அரசியல்தான். அதில் அவமானம் என்பது இல்லை.

46 பொதுநலச் சேவை வேறு, அரசியல் வேறு.

47 பொதுநலச் சேவையில் ஆரம்பத்தில் தூற்றல், பின்னர் போற்றல். அரசியல் இதற்கு முரண்.

48 பதவிமோகம் கொண்டவனும் குடி, கூத்தி போதை கொண்டவனும் ஒன்று. எதையும் செய்வான்!

49 அரசியலில் இறங்குபவன் பகிரங்க விபசாரியைப் போன்றவன்.

50 சரண் அடை. அல்லது சர்வாதிகாரி ஆகு.

51 வேலை நிறுத்தம் வெற்றி பெற வேண்டின் முதலாளி கோழை அல்லது யோக்கியனாக இருக்க வேண்டும். அல்லது தொழிலாளர்கள் மிகுந்த யோக்கியர்களாக இருக்க வேண்டும்.

52 கலை வளர்ச்சியில் கட்சி வளர்ச்சி இருக்கக் கூடாது. இரண்டும் விளங்காது போய் விடும். கட்சியை வளர்க்கக் கலையை உபயோகிக்கலாம். ஆனால், கலையை வளர்க்கக் கட்சியை உபயோகிக்கக்கூடாது.

53 M. L. A பதவியில் மக்களால் தோற்கடிக்கப் பட்டுப் பிறகு M. L. Aக்கள் தேர்வால் M. L.C யாக அதே நபர் ஆவது மக்களுக்கு 'அழகு' காட்டுவது போல் இருக்கிறது!

54 கொடிக்கு மரியாதை இருக்க வேண்டின், ஆளுங் கொடி போகப் பாக்கிக் கொடிகள் இருக்கக் கூடாது. சட்டம் செய்ய வேண்டும்.

55 தீண்டப்படாதவர்களுடன் பிற்பட்ட வகுப்பினர்கள் சேர விரும்புகின்றனர். அரசியல் சலுகை இருப்பதால்.

56 செல்வந்தனின் பிள்ளைகள் நிறையப் படித்து விட்டுப் பெரிய, சிறிய வேலைகட்குப் போட்டி போட்டுச் செல்வாக்கால், வேலை அடைந்து படிப்பையே நம்பி இருக்கும் ஏழைக்குத் தொல்லை தருவதை அரசாங்கம் தடுக்க வேண்டும்.

57 சட்டம் என்றால் பலாத்காரம் என்பதுதான் பொருள். காரணம், கட்டாயப் படுத்துகிறது சட்டம்.

58 பணக்காரர்கள் பலர் இதிகப் பிள்ளைகள் இருப்பதை விரும்பவில்லை. காரணம், அவர்கட்குப் பின்பும் சொத்து குவியலாக இருக்க வேண்டுமாம்.

59 மனிதன் ஒரு பொருளுக்கு விலைக்கொடுக்கிறான் என்றால் பண்டத்திற்கு அல்ல. அப் பொருள் மேல் உள்ள மனித உழைப்புக்கே.

1957ஆம் வருடம் அரசியல் தேர்தல், ஒரு திருப்பு முனை.

60 சமூக நடத்தையிலிருந்துதான் சட்டம் வருகிறது.

61 நீதிதான் வெல்ல வேண்டும். நீதியை நீதி வெல்கிறது. இது அழிவுக்காலம்!

62 படிப்பிலாவது முதல் படியாகச் சமத்துவம் வேண்டும். எல்லோருக்கும் இலவசக் கல்வி எல்லாத் துறையிலும் வேண்டும்.

63 எந்த ஒரு மனிதன், மனிதவர்க்கத்தை மனித வர்க்கம் ஏமாற்றும் வழிகளை நன்கு விளக்குகிறானோ அவன் அந்த மனித வர்க்கத்தால் அடித்துக் கொல்லப் படுவான்.

64 நண்பனாக இருந்தவன் விரோதியாகிறான் என்றால் அவனை இவன் நண்பனாக நினைத்துக் கொண்டிருந்தது தவறு.

65 ஒரு பொருள், ஓர் இடம், அல்லது ஒருவன் வாழ்க்கை அழகாக இருக்கிறது. என்றால் அதனுள் மனிதன் கஷ்டம் நிறைந்துள்ளது என்று பொருள்.

66 அரசியலில் நுழையும் போது, நண்பர்கள் விரோதிகளாவது, விரோதிகள் நண்பர்களாவது, காரணமின்றிப்

புது நண்பர்கள் சேருவது, காரணமின்றி விரோதிகள் உண்டாவது, சர்வ சாதாரணம்.

67 அரசியலில் செல்லாமல் ஒருவன் பல நல்ல காரியங்களை மனித வர்க்கத்திற்குச் செய்ய முடியும். அவன் தன்னலமற்றவனாயும் அவன் வாழ்க்கைக்குப் பிறரை எதிர்பாராதவனாயும், சேவை உணர்ச்சி உள்ள வனாயும் இருக்கவேண்டும்.

68 இயற்கையோடு இயைந்து வாழ்ந்தால் அது ஆண்டவன் படைப்பு. செயற்கைச் சுகத்தில், மனிதனின் உழைப்பு, அவன் வியர்வை இருக்கிறது.

69 தேர்தல்: ஓட்டு கேட்பவன், பணம் கொடுத்துக் கும்பிட்டுப் பிச்சை கேட்கிறான். சேவைக்கு அல்ல, பதவிப்பித்தினால்!

70 சேவை செய்கிறேன் என்று இவன் ஓட்டுக்குப் பணம் கொடுப்பது (இலஞ்சம்) கணக்கில்லை. மக்கள் பணத்தை வாங்கிக் கொண்டு இந்தப் பதவி மோகக் காரனைப் பழிவாங்க வேண்டும்.

71 இந் நாட்டில் சாவில்கூடச் சமத்துவம் இல்லை. ஒரு ஏழை விபத்தில் இறந்தால் அவனுக்கு நட்ட ஈடு குறைவு பணக்காராயிருந்தால் மிக அதிக நட்ட ஈடு. இவன்அவனாகவும் அவன் இவனாகவும் மாறலாம்.

72 பணக்காரர்கள் தாம் திருடுகிறார்கள், வசதி இருந்தும் ஏழைகள் உண்ணுவதற்குக் கேட்காமல் எடுக் கிறார்கள். அது சமத்து என்றும், இது திருட்டு என்றும் மாறி விட்டது.

73 பணம் எல்லாவற்றையும் கொணர்ந்து விடுகிறது. ஒரு பணமில்லாதவன், அறிவு, ஆற்றல், தைரியம், திறமை எல்லாம் இருந்தும் பணம் ஒன்று இல்லாததினால் பயன்

அடைய முடிவதில்லை. எல்லாம் இருந்தும் பணம் என்ற ஒன்று இல்லாதது குறை, இது ஏன்?

74 எவனாவது எப்படியாவது ஆட்சி பீடம் வந்து விட்டால் அவனை அரசியல் மதிக்கும்.

75 பணக்காரர்கள் இன்னும் பணத்தை வைத்துக் கொண்டே எதையும் சாதிக்க முடியுமென நினைக்கும் நிலை என்று மாறுமோ?

76 சமுதாயத்தில் கொள்ளை அடித்தவன் சமுதாயத்தினரிடமே அதை இறுமாப்புடன் காட்டிக் கொள்கிறான். சமுதாயமும் அவனைக் கௌரவிக்கிறது!

77 பணக்காரனும், கொள்ளைக்காரனும் ஒன்றே. பணக்காரன், சிறுகச் சிறுகத் திருடுபவன். அதிலும் பல பேரிடம். கொள்ளைக்காரன், ஒரே சமயம் ஒரேயடியாய் ஒருவனிடம் திருடுபவன்.

78 மூலதனமின்றிச் செய்யும் தொழில் அரசியல் தான்.

79 தனவந்தர்கட்கு அவர்களிடம் உள்ள சொத்து அவர்கட்கே என்ற எண்ணம் வளர வளர இறுமாப்பும் வளர்கிறது. அடிக்கடி அந்தச் சொத்துக்கள் பறிக்கப்படும் என எச்சரித்தால் இறுமாப்பின்றி அடக்கமாகவே இருப்பார்கள்.

80 பேய்வதும், காய்வதும் எப்படி இயற்கையோ, அப்படி பணம் குவிவதும், அழிவதும் இருக்க வேண்டும்.

81 பணத் தேக்கத்தால் இருப்பவனுக்கும் இல்லாதவனுக்கும் ஊக்கம் வளர்கிறது.

82 பணக் குவியலை ஏழை குறை கூறுகிறான். குவியல்காரன், இல்லாதவனை ஏளனம் செய்கிறான்!

83 அந்நிய ஆட்சியை நீக்கி, 'இந்தியன் அடிமை அல்ல' என்பதையும், 'மனிதர்களில் பேதமில்லை' என்பதையும் நிரூபித்தார் காந்தியடிகள்.

84 மனிதர்களில் பேதத்தை உண்டுபண்ணியவனைப் பேதப்படுத்திக் காண்பித்தார் பெரியார்.

85 காற்று, வானம், நீர் போலவே நிலம் யாருக்கும் சொந்தமல்ல என்பதை நிரூபித்தார் வினோபா.

86 காரியம் நடக்க வேண்டுமானால், நடத்தும் ஆற்றல் உள்ளவர்—கமாண்டர்—தேவையே.

87 நீதிமன்றங்கள் பெரும்பாலும் செல்வந்தர்கட்கே. அவர்களின் ஏமாற்றத்திற்குப் பரிகாரம் காணவும் வெற்றியடையவுமே.

88 முதலில், தன் வீடு, பிறகு ஊர், பிறகு நாடு, கட்சிக்கு உண்மையோடு உழைக்கணும். உயிரை விடக் கூடாது!

89 ஒரு தேசத்தின் ஆட்சி ஓர் அறையில், அதிலும் ஒரு நபர் உள்ளத்தில் தோணுவதைப் பொறுத்தது. இது பலருக்குத் தெரியாது. ஆட்சி அதிகாரம் புறப்படுமிடம் பலருக்குத் தெரியாது.

90 உலக ஜீவன்களை ஆட்டி வைக்கும் இடம் எப்படி அனைவருக்கும் தெரியும்? இன்னும் நுண்ணியதாக இருக்கும்! நாட்டை ஆட்டும் ஆட்சி அதிகாரத்தை உருவாக்கும், மனிதனின் உள்ளத்தையே அவனாலும் பிறராலும் அறிய முடிவதில்லை.

91 மெஜாரிட்டி என்பதே பலாத்காரத்தின் மறு பெயர்தான்.

92 ஜனநாயகம் என்பதும் ஒருவரின் சர்வாதிகாரத்திற்குச் சிலர் இணங்குவதுதான்.

93 சர்வாதிகார எண்ணமே ஆண்டவனின் எண்ணம் தான். அவன் நினைவில் இந்த ஜகம் இயங்குகிறது. மனிதனும் அவன்தான்! அதனால்நான் ஒருவன் எண்ணமே உலகாக, அனைவரும் ஏற்க வேண்டுமென்று எண்ணுகிறான்.

94 தன் கருத்தை மாற்றான் கேட்க மனிதன் எவ்வளவோ சிரமப்படுகிறான். ஆனால், அதிகாரத்தில் இருப்பவனின் கருத்தை அனைவரும் அறிய ஆவல்படுகின்றனர். சிலர் கேட்கக் காத்திருக்கின்றனர்.

95 அரசியல் நினைவுக்காரனால் வாழ்க்கை இன்பங்களை அனுபவிக்க இயலாது. அது வெற்றி பெற்றால் ஒழிய.

96 இன்று ஏழைகட்கு உதவும் சோலிச சமுதாயத்தை அமைக்கும் அரசை உருவாக்குவது பெரும் பணக்காரர்களே!

97 பணக்காரர்கள் திட்டமிடுவதாலும், சட்டம் வகுப்பதாலும் தான் ஏழைகள் உயர்வுக்கான சோசலிசம் நிறைவேற முடிவதில்லை.

98 பலசாலி அல்லது பெரும் பணக்காரர்கள் வசம் தான் அரசியல் இருக்கும். புத்திசாலிதான் அதன் எதிரியாக இருப்பான்.

99 உழைப்பையும், அறிவையும் வைத்துச் சம்பாதிப்பது நியாயம். வெறும் பணத்தை வைத்துச் சம்பாதிப்பதுதான் முதலாளித்துவத்தை உருவாக்குகிறது.

100 சமத்துவமாக நடக்க வேண்டும் எனப் பலர் பேசுகிறார்கள். பெரிய தலைவர்களும்கூட. ஆனால், அவர்கட்குச் சமமானவர்களைக்கூட அவர்கள் சமமாக வைத்துக் கொள்ள விரும்புவதில்லை.

101 பணக்காரன் என்பதால் வயதில் சிறியவர்களையும், வயதில் முதிர்ந்தவர்கள் எழுந்து நின்று வணங்குகின்றனர்.

102 பணக்காரனாக எப்படி ஆனான் என்பதை யாரும் சிந்திப்பதில்லை. அவன் சமுதாயத்தைச் சாமார்த்தியமாக அதிகம் ஏமாற்றினானோ அல்லது அதிகம் சுரண்டினானோ அவனுக்கு அதிக மதிப்பு. இதனால் அனைவரும் ஏமாற்றவும், சுரண்டவும் விழைகின்றனர்.

103 மனிதன் யாருக்காக வாழ்கிறான்? ஊருக்கா? இல்லை அவனுக்காக வாழ்கிறான்! ஊருக்கு என்று நினைப்பதே ஒரு பெரும் செயல்தான். இருப்பினும், அதனுள்ளும் அவன் வாழ்கிறான் என்பதும் அவன் மனைவி மக்கட்காக வாழ்கிறான் என்பதும் கொஞ்சம் உண்மை.

104 பாரதி எழுதியதையும், இன்று நடக்கிறதையும் ஒப்பிட்டால், அவன் 'அமர கவி' என்பது விளங்காமல் இல்லை.

105 இராட்டை நாட்டை மீட்டது. இன்று அது, நாட்டை விட்டே மறைந்தது! ஆக்கியது, அழிவதும் நியதியே!

106 கட்சிகளைச் சார்வது, மனிதன், தன்னையே அடகு வைத்துக் கொள்வதாகும்.

107 பாரதக் கதை; கிருஷ்ணனே சூழ்ச்சி என்று பேசப்படுகிறது. இது ஆராய்ச்சி இன்மையே. முதலில்

சகுனி செய்த சூழ்ச்சியை முறியடிக்கவே கிருஷ்ணனுக்குப் பல சூழ்ச்சிகள் தேவைப்பட்டன.

108 மனிதன் சமுதாயத்திற்கு 'உழைப்பு உளியாக' இருக்க வேண்டும். சமுதாயத்தை வழவழப்பாய் இழைக்க வேண்டும்.

109 கடினமான சமுதாயத்தைத் திருத்தக் கொல்லன் பட்டறை போன்ற அரசு தேவை.

110 கால் மேல் தான் தலை நிற்கிறது. அதே சமயம் தலையின் ஆணையால்தான் கால்கள் இயங்குகின்றன.

111 பதவியை நாம் விட வேண்டும். பதவி நம்மை விடக்கூடாது!

112 இந்நாளில், பதவி இல்லாதவன், உதவி இல்லாதவன் என மதிக்கப்படுகிறான்.

113 மக்கள் மந்திரிகளைக் கூட்டமாகச் சென்று பார்ப்பது ஒழிய வேண்டும். சாதாரண மனிதன் தான் ஒரு வேலையைச் செய்கிறான் என்று விட்டு விட்டால் மனிதன் ஓடமாட்டான்!

114 பெருங்கூட்டம் தனக்கு ஆதரவாக இருப்பதைக் கண்டவன் தனக்கு ஏதோ அதிகம் இருப்பதாகக் கர்வம் அடைகிறான். எனவே, மக்களாகிய நாம்தான் ஒரு மனிதனைக் கெடுக்கிறோம்.

115 தொண்டனுக்கு மதிப்பும் கௌரவமும் தர வேண்டும். பதவிகளைத் தரக் கூடாது.

116 சட்டம் நிரபராதியை விடுவிக்கப் பயன்படுவதை விட அவனைத் தண்டிக்க மிகவும் பயன்படுகிறது.

117 தப்பு செய்தவன் தன்னைத் தண்டனையிலிருந்து காப்பாற்றிக் கொள்ளத் துடிக்கிறான். பயப்படுகிறான். நிரபராதிமேல் தப்பு சுமத்தப்படும் போது அவனும் அஞ்சு கிறான். தப்பு செய்ய இல்லை என நிருபிக்கத் துடிக் கிறான். இது என்ன நியாயம்!

118 திருடன் அகப்படாமல் தப்பித்தால், பணக் காரன், ஒரே நாளில்.

119 பணக்காரன் திட்டமிட்டு, அமைதியாகத் திருட்டை, நிதானமாய் நிம்மதியாய்ச் செய்து வருபவன். அவனது திருட்டைச் சமுதாய நியதியாக்கிக் கொண்டவன் அவன்.

120 ஒரு பொதுச் சொத்துக்கு நாம் பொறுப்பேற்று நிர்வாகம் செய்தால், நாம் திருடாமல் யோக்கியமாய் இருந்தால் மட்டில் போதாது. திருடன் சாமார்த்திய மாய்த் திருடி விட்டால் நாம்தாம் திருடனாகிறோம். சமுதாயத்தில் திருட்டு இருக்கும் வரை யாரையும் யோக் கியர்கள் என்று கருதிவிட முடியாது.

121 அனேகமாக எல்லாச் சம்பளக்கார, நடுத்தர, கடைசித் தரக் குடும்பங்களில் 20 ஆம் தேதிக்கு மேல்தான் சச்சரவுகள் வருகின்றன. காரணம், பொருளாதாரத் தேவைகள்.

122 வயதாக, ஆக பற்றைத் துறத்தலும் சிரமமான காரியமோ என ஐயுறுகிறேன். வயதானவர்கள் பணத்தில், அரசியலில், அதிகாரத்தில் நடந்து கொள்ளும் முறைமை. மிகச் சிறு வயதிலேயே பற்றைக் குறைக்க மனிதர்களைப் பக்குவப் படுத்தவேண்டும்.

123 பற்று என்பதன் வயதும், வயதுடனே வளர்வ தால் அது நன்கு வேரூன்றி விடுகிறது. அதனால்தான்

விளையும் பயிர் முளையிலே என்கிறார்கள் போலும்; சிறு வயதில் பற்றை நீக்கி அல்லது விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையில் வாழ்கிறவர்கள்தான் வயதானாலும் அப்படியே வாழ இயலும்.

124 காரண காரியங்களை வைத்தே வீடு முதல் நாடு வரை வளர்ந்து விட்டது. முன்பெல்லாம் அப்படியல்ல. அன்பு முறை, கடமை என்றே வளர்ந்தது வீடும், நாடும்.

125 வக்கீல்கள் சட்டப்படி, தன் கட்சியாளரின் எதிரிகளைச் சட்டத்தால் ஏமாற்றித் தண்டிக்கும் அடியாள்கள்!

126 கடலூர்தான் வெள்ளையர் ஆதிக்கம் காலூன்ற கிளைவுக்கு ஆதரவு தந்தது. வெள்ளையரை வெளியேற்றியது வட நாடுதான்!



# அறிவியல்

1 மனதிற்கு வேலையின்றி, அதாவது, தூங்காமல் சில வினாடிகள் தூங்கினால் அது ஆயுளைச் சில வருடங்கள் மிகுவிக்கும்.

2 கணநேரம் நம்மையறியாமல் சும்மா இருப்பது தான் பேரானந்தம்.

3 உலகில் உயிரற்றது எதுவுமில்லை.

4 அணுமயம் உலகம்.

5 உலகில் இறப்பது என்பது எதுவுமில்லை. ஆனால், ஒரு மாறுதல் அல்லது பலமாறுதல்கள் அடைதலே ஒழிய எதுவும் இறப்பதே இல்லை என்பது என் துணிவான முடிவு.

6 காற்றில் கலந்த சங்கீத ஒலியை ரேடியோ மூலம் பிரித்து அனுபவிப்பது போல் ஆகாய அணுக் கூட்டத்தில் கலந்த எல்லாவற்றையும் பிரிக்கலாம்.

7 மனிதன் உலகத்திலுள்ள அத்துணையும் சேர்ந்த ஒரு அணுக் கூட்டம்.

8 மனிதனிடம் இல்லாத எதுவும் வெளியில் இல்லை.

நாம் நினைத்தவை நடப்பதாக எண்ணுவது தவறு; நடக்கப் போவதைத் தான் நாம் நினைக்கிறோம்.

9 முன்னே இருந்தவர்கள் எழுதி வைத்தார்கள் என்றால், அவர்கள் இருந்ததை இருந்தபடி இறுத்தி வைத்தார்கள்.

10 இன்று அமெரிக்காவில் கொலைகாரனைக் கண்டு பிடிக்க இயந்திரம் இருக்கிறது. இந்தியாவில் ஜாதகம் பார்த்தே கண்டுபிடிப்போம்.

11 அக்கால உண்மைச் சாத்திரங்களைக் கொஞ்சம் கூட மாற்ற உனக்கு அருகதை இல்லை. ஏன்? அத்துனையும் அனுபவித்து எழுதிய சாரம். அதன் உண்மைப் பொருளை விளங்கிக் கொள்ளாது, அதைக் குறை சொல்லாதே.

12 உள்ளத்தில் கள்ளமின்றிக் காணின் ஒன்றுமில்லை. கள்ளத்துடன் பார்த்தால் உடனே தெரிந்து விடும்.

13 குறை கண்ணில் இல்லை. கருத்தில்தான்.

14 குளவி புழுவைக் கொட்டிக் குளவியாக்குகிறது என்பது தவறு. குளவிக்கும் புழுவுக்கும் சம்பந்தம் இல்லை.

15 எக்ஸ்ரே மூலம் உடலினுள் இருக்கும் ஒரு கண்ணாடித் துண்டைப் பார்க்க இயலாது என்பது என் கருத்து. காரணம் அதன் வழி ஒளி ஊடுருவிச் சென்று விடும்.

16 உயிருள்ளவைகளுக்குப் பகுத்தறிவுண்டு.

17 படைப்பில் யாவும் எல்லாவற்றிலும் சமம்.

18 அழகு என்பதும், அவலக்ஷணம் என்பதும் உருவில் இல்லை. பார்ப்பவன் உணர்வில்தான்.

19 மலம் புதைத்து வைத்திருக்கும் இடம் மனிதன். அது வெளிவந்தால் கேவலமாக நினைப்பது தவறு.

20 இயற்கையைச் செயற்கை வெல்லாது; தோன்றும். முடியாது.

21 செயற்கையும் இயற்கையே.

22 இயற்கையின்றிச் செயற்கையில்லை.

23 இயற்கையின் செயற்கைதான் செயற்கை.

24 உயிரைத் தின்று உயிர் வாழ்வனதான் உலகில் உள்ள அத்தனையும்.

25 சைவன், அசைவன் என்று கிடையாது. சைவன் உண்பவை உயிரற்றவை என நினைப்பதால் இப் பிரிவு ஏற்பட்டது.

26 விந்தை வீணாக்காதே. காரணம் ஓர் அணு அளவு வெளிப்பட்டால் உன் உடலின் அத்தனை உறுப்புகளிலும், உணர்வுகளிலும் ஓர் அணு அளவு குறையும் என்பது உண்மை. இதை உணர்க.

27 வித்து=விந்து; விதையின்றி வளரா, விந்தின்றிப் பிறவா.

28 விந்தை வெளிப்படுத்தாமல் இருப்பவனுக்கு உலகில் எதுவும் விந்தையல்ல அறிக!

29 விந்தே வீரியம்! விந்தே சக்தி; விந்தே உன் உருவம்! விந்தே உனக்குச் சொந்தம். விந்தே பந்தம். விந்தே பரம்பொருள்!

30 வினையே நினைவு.

31 ஒரு காசை மத்தியில் வைத்து அதை அழுத்திக் கொண்டு ஒருபுறத்தில் ஒரு காசை வைத்து மறுபுறத்தில் இன்னொரு காசில் சுண்டினால் (தள்ளினால்) மறுபுறம் உள்ள காசு அசைகிறது. நடுக் காசில் அசைவில்லை. காரணம் தேவை.

32 நாவினால் சுட்டது=நெஞ்சினால் சுட்டது. எய்தவன் அல்ல, அம்புதான் நாவு. எய்தது நெஞ்சம். நெஞ்சின் நஞ்சுதான் நாவின் தீ.

33 உலகில் கூர் என்பதே இல்லை. கூர் எனச் சொல்லிக் கொண்டு போவதெல்லாம் சிறிய வளைவையே

34 ஆகாயத்தில் நமக்கு வேண்டியதெல்லாம் இருக் கிறது. ஆராய வேண்டும்.

35 பன்றி காற்றைப் பார்க்கிறது என்றார், வயோதிகர். பரிசோதித்தனர். ஒருநாள் அவை திடீரெனப் பேய்க் காற்றைக் கண்டு ஓடின என்றார், வயோதிகர். உடனே பரிசோதனைகள். மிருக ஆராய்ச்சியாளரைக் கேட்டனர். அவர், அவைகளின் பிடரி மயிரின் மேல் மெல்லிய காற்றுப் பட்டாலும் அவைகட்குச் சப்தம் கேட்டுப் பயந்து ஓடும் என்றார் என்பது மஞ்சரி செய்தி. பன்றிகளின் பிடரி மயிரை வெட்டிவிட்டுப் பின்னர் சோதித்து இம் முடிவுக்கு வர வேண்டும் என்பது என் எண்ணம்.

36 காதல் கல்யாணத்தில் ரத்து அதிகம். கட்டாயக் கல்யாணத்தில் இது குறைவு காரணம் விளங்கவில்லை.

37 அறிவு அறிவைத் தழுவும். இனம் இனத்துடன் ஐக்கியம்.

38 நல்லது செய்வது மட்டில் அறிவில்லை. கெட்டது செய்வதும் அறிவுதான்.

39 நெற்றியில் பொட்டு அல்லது எதையாவது வைத்து மறைக்க வேண்டும். காரணம், நெற்றிக்கண் இருக்கிறது.

40 நெற்றியில் கடிகாரத்தை வைத்தால் சப்தம் ஏற்படும். அது உணர்வுக்கு எட்டும். பொட்டு இருந்தால் ஆரம்பக் கார்களின் mesmerisom பாதிக்காது.

41 நல்லவன், யோகி, பக்தன், ஞானி என்றெல்லாம் சொன்னால் அவன் சாகக் கூடாது. அதாவது மாறுதலின்றி இருக்க வேண்டும் என்பதுதான் என் முடிவு.

42 செத்த மீன், ஆடு இவைகளைத் தின்பதைவிடப் பால் குடிப்பது மிக்க பாவம். ஆனால், உடலுக்கு மிக்க உரம்.

43 உயிரை உயிர் தின்பதுதான் உயிர் வாழ்க்கை.

44 உலக ஆரம்பத்தில் பூமி பெரும் பாகமாக இருந்து. தண்ணீர் ஒரு சிறு பாகம் இருந்திருக்க வேண்டும். இன்று தண்ணீர் பூமியை உண்டு பெருகி இருக்கிறது. இப்படி ஜலமாய் வரும் நாள் பிரளயம் போலும்! மீண்டும் சூரியனால் ஜலம் குன்றிச் சிறிது சிறிதாய்ப் பூமி தோன்றும். இப்படி மாறி மாறி வருவதே பிரபஞ்சம் போலும்!

45 அதிக பூகம்பங்கட்குக் காரணம்? என் எண்ணம்: போரிங் மூலம் மிஷின்கள் மூலம் கீழுள்ள நீரோட்டத்தை வெளிப்படுத்தி விடுவதால், குறைந்து நிலத்தைத் தாங்கப் போதுமான அளவு தண்ணீர் இல்லாமல் நிலம் உள் வாங்குகிறது என நினைக்கிறேன்.

46 மழையைத் தடுப்பது மின்சாரம் எனத் துணிந்து கூறுகிறேன். காரணம் ஒவ்வொரு பல்பும் எவ்வளவு உஷ்ணத்தைக் கக்குகின்றன.

47 பூமியில் உள்ள நிலக்கரி, தங்கம், கந்தகம் போன்ற பல பொருள்களை எடுத்து விடுவதால் பூமி என்பதற்கு வேண்டிய முக்கிய உறுப்புக்களைச் சிதைப் பதைப் போல் எனக்குத் தோன்றுகிறது. அதனால் இயற்கை மாறலாம்.

48 தெற்கே இருந்துதான் மனிதன் வடக்கே சென்றிருக்கிறான் என நினைக்கிறேன். காரணம் போகப் போக ஆசாரத்தை — பழக்கத்தை — விட்டொழித்துக் கொண்டு போயிருக்கிறான். அதனால் இன்னல் படுகிறான்.

49 வடக்கே தலைவைத்தே படுக்காதீர் என்றனர் முதாதைகள். காரணம் காந்தம் இருக்கிறது என்றுணர்ந்து தான். இது மேனாட்டிற்கு முன் நாம் அறிந்த உண்மை.

50 வறுமை, பட்டினி, அதிகரிப்பினால் பிள்ளைகள் உற்பத்தி அதிகம் இருக்கிறது. காரணம், பரம்பரைப் பணக்காரன், வஸ்தாத்களுக்குப் பிள்ளையிருப்பது சொற்பம். ஏழைக்குக் குழந்தைகள் அதிகம்.

51 சூரியன் மாறா ஒன்றுபோல் இருக்கிறது. அதனால்தான் அதைச் சிவசூரியன், கடவுள் என வழிபடுகிறான் போலும்!

52 சிறுநீர் இருந்தவுடன் தண்ணீரால் சுத்தம் செய்ய வேண்டும். சில பிராமணர்களும் எல்லா முஸ்லீம்களும் இதைச் செய்கின்றனர்.

53 தண்ணீர் ஒரு அவ்ஷதம். காரணம், எல்லாவற்றையும் சுத்தம் செய்ய உதவுகிறது.

54 சிறிய கட்டிகள் வரும் சமயத்தில் எச்சில் தொட்டு வைத்தால் உடன் சுருங்கி விடும். அல்லது கரைந்து விடும். உணவைக் கரைப்பதால், இதற்குக் கரைக்கும் சக்தி இருக்கிறது.

55 அம்மைப் போட்டுக் கொள்வதை, தடுப்பு ஊசிப் போட்டுக் கொள்வதை நான் வெறுக்கிறேன். உடலுக்கு வரும் உபாதைகள் தானே நீங்கிவிடும். இந்த நம்பிக்கையும், திடமும் நமக்கு இல்லை.

56 பைத்தியத்திற்கு வைத்தியம் நல்ல மனமுள்ள பொறுமையான மனிதன். கடுமையான டாக்டர் இல்லை.

57 மனிதன் நிமிர்ந்து உட்கார வேண்டும். நடத்தல், நிற்றல் அப்படியேதான். கூனாக இருப்பது உடலுக்குத் தாழ்வு.

58 குஷ்டரோகியைப் பார்த்து அவன் கஷ்டப்படும்படி அருவருப்பாய் நடக்காதே. அவனுக்குக் குணமாக உன் ஆத்ம சக்தியிடம் வேண்டிக் கொள். பிறக்கும் போது இல்லை; இடையில் வந்தது; உனக்கும் வரலாம்; ஜாக்கிரதை!

59 நெற்றிக்கண் நமக்கு உண்டு. அதை மறைத்திருக்க வேண்டும். திலகம் அணிந்திரு.

60 மார்பு துக்கத்தையும், சந்தோஷத்தையும், ஆச்சர்யத்தையும் உணர்கிறதை நாம் உணர்கிறோம்.

61 மழைநாள், பனிக்காலம் — இந்த வேளையில் தான் மெத்தை மீது படுக்க வேண்டும்.

62 சூன்யம்=எங்கும் கையில் படாத, கண்ணுக்குத் தெரியாத, பிரிக்க முடியாத தொடர்புடைய அணுமயம்.

63 மனிதன் தரைமேலிருந்து தவம் செய்வது கூடாது. பலகை மேல், தோல் மேல் வஸ்திரம் போட்டு உட்காரச் சொல்லியுள்ளனர். காரணம் பூமியில் மின்சார சக்தி ஊடுருவும். அன்றிப் பூமி பொதுவாக அதையும் ஆக்ரஷிக்கும். ஆகையினால் அதற்கு எதிராக மனிதன் ஊடுருவிச் செல்லாதவற்றின் மேல் அமர அன்றே சொன்னார்கள் நம் மூதாதையர்கள். என்னே விஞ்ஞான அறிவு!

64 ஒரு சிற்றுண்டி நிலையம் மிக உயர்ந்த, சுகாதார வசதியுடன் ''மட்டரக சிற்றுண்டிச் சாலை'' என்ற விளம்பர போர்டுடன் நடத்த எண்ணியுள்ளேன்.

65 அங்கஹீனர்க்கு அறிவு சற்று அதிகம் என்கிறோம். காரணம் ஒரு சக்தி அதன் வழியாய் வெளியாகாததால் அறிவால் வெளிபடுவதேயாம். யோக சாதனங்களும் இப்படித்தான். கண்ணை மூடிக்கொள்ளல், நிலைத்து உட்காரல், காது கேட்காமல் இருத்தல். எல்லாவற்றிலும் அறிவு பெற்றுத் திகழுகையில் 'அறிவாளி யோக சக்தி! எனச் சொல்லுகிறோம்.

66 அமைதியில் அறிவு விளக்கம் உண்டு.

67 ஞாயிற்றை எண்ணி வழிபடின் ஒளிமிக்க உணர்வு வரும்.

68 நம் தமிழ்நாட்டில் நாளாவட்டத்தில் கருப்பு நிறம் போய் சிவந்து வருகிறோம். காரணம் சூரியனில் பல கறுப்புப் புள்ளிகள் தோன்ற ஆரம்பிப்பதால், அதனால் வெப்பம் தணிவதால், இம் மாறுதல்.

69 கடலில் எவ்வளவு விஷம் கலந்தாலும் ஒன்றும் பாதிக்காது. காரணம் மண்ணில் உண்டாவது ஜலத்தை விடக் குறைவுதானே. அதேபோல் ஆகாயத்தில் கலந்தால் கொஞ்சமும் பாதிக்காது. காரணம் ஜலம், பூமி இதைவிட

ஆகாயம் பல பாகம் பெரியது. இப்படி இருக்கக் குடம் பாலில் துளிவிஷம் என்கிறார்கள்.

70 முகத்தைக் காக்கும் தாடி அகத்தையும் காக்கும்.

71 இருவர், ஒருவர் சொற்படி கேட்கின்றனர், அல்லது புகழ்கின்றனர் — என்றால் அவனுடைய அறிவுச் சக்தியோ, ஆத்ம பக்தியோதான் காரணம். ஒருவன் சொல்லைப் பலர் கேட்கின்றனர், புகழ்கின்றனர். அவர் பெரிய அறிவாளி அல்லது ஆத்ம ஞானி என்பதில் சந்தேக மில்லை.

72 இனத்தை இனம் நாடும். இதில் அறிவு மட்டும் அல்ல. உதாரணம் என் கடையிருப்பில் சில்லரை இருந் தால் நிறையச் சில்லரை வருகிறது. நோட்டு இருந்தால் நோட்டு வருகிறது. இதைப் போலவே பணக்காரனிடம் பணம் சேரும் போலும்! அவன் மனோபாவமோ அல்லது பணத்தின் இன இழுப்புச் சக்தியோ தெரியவில்லை. இதனால்தான் வாங்கிய கடனைப் பணக்காரன் கொடுப்ப தில்லை. ஏழை உடன் விட்டெறிவான்.

73 கண்ணுக்கெட்டிய தூரம் வரை என்பது வரை யறைக்குட் பட்டதல்ல. காரணம் அதிக தூர நட்சத்திரம் தெரிகிறதே. கண் ஒளி அவ்வளவு தூரத்தைக் காண் கிறதா? நட்சத்திர ஒளி கண்ணிடம் வருகிறதா? வருகிற தென்றால் பாக்கி தூரத்தில் உள்ள பொருள்களை மட்டில் கண் பார்க்கிறதா? கிட்டே தெரியும் ஒரு பொருள் எட்டே செல்லச் செல்ல மறையும். பொருள் அல்ல கண் பார்வை. மிகப் பெரிய நட்சத்திரம் மிகச் சிறியதாய்த் தெரிகிறது.

74 மண்ணில் ஒன்று இருக்கிறது. ஒன்று இல்லை என்றில்லை. காரணம் மண்ணிலிருந்துதான் நமக்கு எல்லாம் கிடைக்கிறது. நாம் உள்பட மறைகிறோம்.

75 கரும்பு, வேம்பு போன்றவை இனிப்பையும் கசப்பையும் தனியே இழுக்கின்றன.

76 இதைப் போலவே சில மனிதர் தங்கள் உடல் அணுக் கூட்ட அமைப்பால் நல்லதை கிரகிக்கிறார்கள். சிலர் அதற்கு மாறாகவும் இருக்கிறார்கள்.

77 இன்று கரும்பு எடுக்கையில் ரயிலில் ஒரு பையன் கால் அரைப்பட்டுத் தூக்கிச் சென்றனர் ஆஸ்பத்திரிக்கு. நன்கு பேசிக் கொண்டிருந்தான். இருப்பினும் எனக்குச் சில நிமிடங்களில் அவன் சாந்தி அடைந்த நிலை என் மன அமைதி நிலையில் தெரிந்தது. இரவு இது விஷயம் விசாரித்தேன். ஆஸ்பத்திரிக்குச் செல்லும் முன் இரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஆத்மா பிரிந்தது எனக் கேட்டு என் நிலையை, நிலை நிறுத்திக் கொண்டேன்.

78 நமக்குக் கண்ணீர் வரின் எதிரிக்கும் கண்ணீர் வரும். சிரிப்பு வரின் சிரிப்பு வரும். இரண்டும் நடிப்பாக இருந்தால் இரண்டும் நடக்காது.

79 நோயாளி மனத்தில் வியாதியின்றி, அல்லது வியாதி என்ற நினைப்பேயின்றி இருத்தல் மனிதனுக்குத் திடகாத்திரம். காரணம் மனமே வாழ்வு!

80 ஆக்கிரஷ்ணமே உலகு. ஒன்றை ஒன்று தழுவியதே உலகு. கூட்டுப் பொருள் உலகு. எதுவும் தனித்து இயங்காது.

81 கண் ஒளி தூரத்தில் உள்ள உருவத்தை பார்க்கிறதா? தூரத்தில் உள்ள உருவம் கண் ஒளியிடம் வந்து விடுகிறதா? இரண்டும் உண்மை என நினைக்கிறேன்.

82 கண்ணை மூடிக் கொண்டால் இருட்டா? இரவு அல்லது ஒளியில்லா இடம் இருட்டா?

83 கண்ணற்றவர்க்கு ஒளியில்லை. இருட்டு இருக்கிறது. கண்ணொளியில்லையா? உண்மை. ஒளியில்லையா? எப்பதிலையும் உணர்ந்து பார். உடனே முடிவு கட்டாது சிந்தி.

84 கொசு வந்து ஓலமிடுகிறது காதில் என்று நினைக்கின்றனர் பலர். அப்படியல்ல. அவைகளின் அசைவின் சப்தம் காதண்டை வரும் போதுதான் இவனுக்குக் கேட்கின்றது.

85 வைசூரி, அம்மை போட்டால் தலைக்குத் தண்ணீர் விட்ட தினத்தில் 'மாரியாத்தா மாவு' வழங்கப் படுகிறது. அதில் அவசியம் சொற்ப அளவு நோய் கிருமிகள் கலந்தே இருக்கும். ஆகையால்தான் அக் காலத்தில் அன்னையர், பெரியவர் மாரியாத்தா மாவு வாங்கிக் கொள் என்றனர் போலும்!

86 குழந்தையின் கீழ் உதட்டில் மினுமினுப்பு இயற்கையின் சிறந்த விநோதம். ஒழுகும் சொள் எச்சில் மிகச் சுத்தமானது.

87 பசுவின் காம்பில் இருக்கும் உண்ணி, பால் உண்ணாது, இரத்தம் அருந்துகிறது.

88 ஒவ்வொரு வினாடியும் புது விதமே (வருட பிறப்பு)

89 மனிதன் உண்ணும் வகை அத்தனையும் மலமே. காரணம் நாவிற்குக் கீழ் சென்றதும் ருசி யில்லை. சில காலம் கழித்து மலம் வருகிறது.

90 மலம் 24 மணிக்குப் பின் சில இடம் சூழ்நிலைகளில் சுத்தமான எறும்பு அரித்த மண்போல் மாறுகிறது.

91 மனிதன் மாற்றி அனுபவிக்கத்தான் பலவற்றை நினைக்கிறான். காரணம் மாறி வந்தவன், மாறப் போகிறவன்.

92 தவறு என்று தெரிந்தும் தவறு செய்யும் இனம் மனித இனம்தான்.

93 விளக்கு ஒன்றை ஏற்றி அதன் பிரதி பிம்பத்தைக் கண்ணாடியில் எதிரில் கண்டால் சற்று நேரத்தில் கண்ணாடிச் சட்டம், கண்ணாடி, மறைந்து பிரதி பிம்பம் மட்டில் தெரியும். தனிமையில் இது மன அமைதிக்கு மிகச் சிறந்தது. நேற்று அனுபவம்.

94 குண்டலி சக்தி உந்தியிலிருந்து கனல் இடையே கிளம்பிக் குண்டூசி போல் தலை மேலாய் (தலைப் பிரட்டைப் போல்) முள்ளந்தண்டு வழி மூளை வந்து நெற்றிக் கண் முன் ஜொலிக்கிறது. மீண்டும் கொணரும் போது தலை மேலாகவே அச் சக்தி வந்து உந்தியைண்டை வந்து திரும்பிக் கொள்கிறது. முதுகு நடுவில் ஒரு கூச்சம்! பிடரியில் வருகையில் ஒரு கூச்சம்! மூளையிடம் வரும் போது அமைதி! நெற்றிக் கண் முன் ஜோதி ஜொலிப்பு! மீண்டும் உந்தியை அடைந்ததும் சாந்தி! மின் சலனம்.

95 எண்ணெய் எரிவதில்லை. திரியும் எரிவதில்லை. இரண்டும் கலந்தே எரிகிறது.

96 நடு நாயகமாய் இருப்பது இக் காலத்தில் இருபுறமும் இடியாய் முடிகிறது. அக்காலத்தில் இந்நிலைக்கு இருபுறமும் கௌரவம். இக் காலத்தில் ஒருபுறம் சார்தலே மேல்.

97 தோன்றல், இருத்தல், தோற்றுவித்தல், மாறுதல்—வாழ்வு.

98 தோள் பலம் வேண்டும். வாள் பலம் வேண்டாம். மனோபலம் வேண்டும். தோள் பலம் வேண்டாம்.

99 உலகம் இரண்டில் அடங்கும். மண், விண்.

100 காலை சந்தியா வந்தனம் சமயம் ஸ்னானம் செய்த தண்ணீரை மந்திரம் ஜபித்து மூன்று முறை சில சொட்டுக்களோ, கொஞ்சம் தண்ணீரோ சாப்பிடுவது நல்லது. மேலுக்குப்பட்ட தண்ணீர் உள்ளுக்கும் செலுத்தப் பட்டால் ஜலதோஷம் அல்லது ஸ்னான கெடுதல் நீங்கும் என்பது உணர்.

101 முத்து, ஒரு துளி மழைத் தண்ணீர்.

102 பெண்மை இனிமை; ஆண்மை கடுமை; சிந்தித் துப்பார்.

103 நம் உடம்பில் சிறந்த அவயம் கண் என்றே கண்டேன்.

104 மொழி என்றால் தாய் மொழிதான். "மொழி வதே மொழி"

105 'ழ' கரம் தமிழனின் தலை சிறந்த எழுத்து.

106 மூளைக்குக் கண் ஒரு பிரதிபலிக்கும் கண்ணாடி. பொருள்களின் உருவம்தான் கண்ணில் வந்து விழுகிறது.

107 'நட்சத்திரம் விழுதல்' என்பது பொய். அதன் மிகச் சிறிய ஒரு துளியின் சிதறல் போலும்! அதுதான் என்ன ஆகிறது? எங்கே போகிறது?

108 ஆகாயத்தில் சில மைல்களுக்கு அப்பால் பிராண வாயு இல்லை என்கிறார்கள். பிராணவாயு இல்லாத இடத்தில் பொருள்கள் எரியாது என்கிறார்கள். சூரியனும், நட்சத்திரங்களும் நெருப்பு மயம். எப்படி?

109 சோப்பு தேய்த்துக் குளிக்கக் கூடாது. நான் முப்பத்து ஏழு வருடமாய் உபயோகிப்பதில்லை.

110 சவரம் பண்ணிக் கொள்ளாமல் இருப்பது நலம். பண்ணிக் கொண்டாலும் நீண்ட நாள் இடைவெளியில் செய்து கொள்ள வேண்டும். தண்ணீர் மட்டும் தடவி ஒரே தடவையில் ஒரு பக்கமாக (மேலிருந்து கீழ்) சவரம் செய்து கொள்ள வேண்டும்.

111 பகுத்தறிவால் பாழ்படுபவன் மனிதன் ஒருவனே.

112 பகுத்தறிவு என்பது அறிவா? அறிவின்மையா?

113 ஓர் இனத்தில் உயர்வு தாழ்வு என்பது மனித இனத்தில்தான் என நினைக்கிறேன். மனித இனத்தில் தான் யாவும் உச்ச நிலையில் இருக்கிறது.

114 சில கடலில் குளித்தபின் உடம்பு தோல் வறட்சியாய் இருக்கிறது. சில சமுத்திரத்தில் வழு வழுப்பாய் இருக்கிறது.

115 உலகில் முடிவாக உள்ள வர்ணம் வெண்மையும் கருமையும்.

116 பசுமையே பசியின்மை. பசுமையே உணவு. உணவே உயிர்.

117 நாம் தவறு செய்தோமா என்று சிந்திக்கையில் மேனோக்கிப் பார்ப்பர். தவறு செய்து இருப்பின் தலை தாழ்த்திக் குனிந்து நாமே வருந்துவோம்.

118 ஆரம்பத்தில் ஜீவன் எல்லாம் புல்லாய்த் தோன்றுகிறது. இதனால்தான் புல்லாகிப் புழுவாகி என்று பாடினார் போலும்!

119 பிராணனுக்குப் பிராணவாயு அவசியம். பிராண வாயு போய்விட்டால் பிராணன் போய்விடும்.

120 இரவில் படுக்கையில் மூத்திரம் அதிகம் சேரின் அதை வெளியனுப்பாமல் உறங்கினால் கெட்ட அல்லது நல்ல கனவு திடீரென்று ஏற்படும். அல்லது அவசியம் விந்து வெளிப்படும். வயிறு கூடுமான வரை காலியாய் இருக்க வேண்டும் இரவில்.

121 ஓடும் வண்டியில் பிரயாணம் செய்யும் போது கூடுமான வரை தலையின் பின் பாகத்தை மட்டில் அந்த வண்டியில் படும்படி வைத்தல் கூடாது. காரணம் தைராயிட், மஞ்சாமுகம், சிறுமூளை முதலியன அதிக வேலை செய்து பாதிக்கும்.

122 கோழி சரியாக 4½ மணிக்குக் கூவுகிறது.

123 பூமி தண்ணீரில் அமுங்கிக் கொண்டே வருகிறது. ஆர்க்மிடிஸ் விதிப்படி தண்ணீர் பெருகுகிறது.

124 உயிர் மாறியதும் மீண்டும் உண்டாக்கலாம். விஞ்ஞானம். ஆனால் அறிவு, மூளை எப்படி வேலை செய்யுமோ?

125 காலன்=காலம்; காலன் வந்துவிட்டான்.

126 குஷ்டம் காதில் ஆரம்பிக்கும். ஃபோன் காதண்டை வைத்துக் கேட்கின்றனர். (பரவும்) சுத்தம் செய்ய வேண்டும்.

127 எல்லா மலங்களையும் வண்டுகள் உருட்டுவது இல்லை. வண்டு உருட்டும் மலம் வரும் சமயம் உடல் நிலை கெடும்.

128 பன்றிக் கூட்டம் எல்லா மலங்களையும் தின்பது கிடையாது. அவை தின்னக்கூடிய மலம் வரும் சமயம் உடல்நிலை சரி.

129 படிப்பு வாசனை அற்றவர்கள் செய்த எல்லா வேலைக்கும் இன்று அதிகப் படிப்பு உள்ளவர்கள் தேவை யாகின்றனர்.

130 ஆவது கடினம்; அழிவது சுலபம்.

131 மூத்திரம் இருந்த இடத்தைப் பார்த்து ஆண் அல்லது பெண் என்று சொல்லலாம்.

132 உலகம் பெருக வேண்டும் அல்லது ஜனங்கள் குறுக வேண்டும். இரண்டும் தயாராய் இருக்கிறது. அது நிகழுமோ அறியேன்!

133 அமைதி, நிம்மதி, கவலையின்மையற்ற உயிர் மனித உயிர் ஒன்றுதான்.

134 மேல்நாட்டை யந்திரம் நடத்துகிறது. மேல் நாடே யந்திரம்தான்.

135 கண்ணின் மணி மனிதனுக்கு எல்லாவற்றையும் விடச் சிறந்தது.

136 நம் உடலில் பிறவி முதல் வளராமல் இருப்பது எது? கண்மணி.

137 ஆசனங்கள் போடுவது மிகவும் நல்லது. அவை களில் சிறந்தது. சர்வாங்க ஆசனம். பல ஆசனம் தெரியும்.

138 எது பகுத்தறிவு? சுயநலத்திற்காகவே எல்லா வற்றின் வாழ்க்கையையும் பாழ்படுத்துகிறானே மனிதன், அதுவா? ஆம். அதுவேதான் பகுத்தறிவு.

139 ஒன்றைப்போலவே ஒன்று இல்லாததுதான் இயற்கை. வித்தியாசமின்றிப் பல இருப்பது செயற்கை.

140 சர்வாங்க ஆசனம் ஆரம்பத்தில் மலச்சிக்கல் உண்டுபண்ணும்.

141 பால், தயிர் கிளாசில் வைத்தால் சீக்கிரம் புளிப் பேறுகிறது.

142 நெய்யைச் சாடியில் வைத்தால் மணமாக சில நாட்கள் கெடாமல் இருக்கும்.

143 பூமி தன்னைத்தானே கிழக்கிலிருந்து வடக்காகச் சுற்றுகிறது. காரணம் ஒரு கனத்ததைக் கட்டி ஆட்டி விட்டால் மேல் கண்டபடி சுற்றி நிலைக்கு வரும்.

144 அவசரமான காலம் நடக்கிறது. யாருக்கும் அமைதியில்லை. காரணம் போக வேண்டியது. அழிய வேண்டியது அவசரப்படுகிறது.

145 மேல்துண்டு போடுவதிலிருந்தே ஒருவன் குணாதி சயங்களைக் கூறமுடியும் என்பது என் கருத்து.

146 தண்ணீர், பாசி, மலம்—இவைகள் சேர்க்கையில் ஒரு சிறு — 'இது' போன்ற நத்தை உற்பத்தியாகி உயிருடனிருக்கும்.

147 இன்றைய மனிதன் எல்லாவற்றையும் விரைவில் அறிந்து விட்டான். இவனைவிட உச்சநிலை எந்தக் கால மனிதனும் அடைந்திருக்க முடியாது. ஆனால் இவனும், மனித இனம் மட்டுமென்ன, ஜீவராசியே அழியும்!

148 அன்றைய மனிதன் வாழ விழைந்தான். அனுப விக்க நாளாகிக் கொண்டே போனது. இன்றைய மனிதன் மிகத் துரிதமாக அனுபவித்துவிட்டுப் போக நினைக்கி றான். சீக்கிரமே போய்விடுவான்.

149 நகங்கள் உடல் உஷ்ண நிலையிலிருந்தால் கடினமாக இருக்கும். வாய் நாற்றம் உண்டாகும்.

150 செயற்கையை அழிப்பதைவிட இயற்கையை அழிப்பது மிகச் சிரமம். பல இயற்கையை அழிக்கவே முடியாது. எல்லா செயற்கையும் அழிக்கக்கூடியது.

151 உள்—மெய் = உண்மை
வாய்—மெய் = வாய்மை
மெய்—மெய் = மெய்மை

152 போர்த்திக் கொள்வதினால் ஏன் குளிரில்லை? உஷ்ணம் போர்வையால் இல்லை. நம் உஷ்ணம் வெளியாகாததால், சூடு இருக்கிறது. வெளிக் குளிரும் உள் வருவதில்லை.

153 கொட்டாவி விடுவதற்குக் காரணம், உள்ளிருந்து கரிமிலவாயு வெளிபடுவது அல்லது பிராணவாயு தேவைபடுவது.

154 எந்த ஆண் மகனும் கண்ணுக்கெட்டிய தூரம் வரை பெண் மகள் துடைக்கு மேல் தெரிந்தால் உடன் பார்க்கிறான். சமீபமிருந்தால் மர்மஸ்தானம் எந்தப் பெண்ணுடையதாயினும் தெரிந்த உடன் துணி விலகிய உடன் இவன் கண்ணுக்குப் படுகிறதோ இவன் பார்க்கிறானோ தெரியவில்லை. இவன் வந்த வழி—வெளியேற்றிய இடம் மீண்டும் உள்ளுக்கு இழுக்கிறது!

155 கோபமே மனிதனுக்குச் சத்துரு ஏன்? நீ அனுபவிக்கையில் தெரியும். கோபம் வரும்பொழுது, உன்னையே நீ மறந்து ஆத்திரப்பட்டுக் கண்கள் சிவந்து நெருப்பு போல் உன் இரத்தம் சூடேறி உடல் கொதித்துக் கஷ்டப்படுகிறாய். இது உன் உடலுக்கு, அளவுக்குமேல் விஷம்.

156 தலையை சீவுவதில் அரக்குச் சீப்பாயின் காந்தம் இருக்கும். காரணம் மயிரில் அரக்கு தேய்த்தால் மின்சாரம் ஏற்படும்.

157 என்னை யாராலும் கெடுக்க முடியாது. ஒருவனால் கெடுக்கப்படக் கூடியவன் அறிவற்றவன்.

158 1—9—52 தேதியில் திருவிளையாடல்; 1952. தேதிகள் இப்படி 47 வருடத்திற்கு ஒருமுறை வரும்.

159 பெற்றோர்களின் மர்ம ஸ்தானங்களைப் பிள்ளைகளுடையதைக் கண்டு நிர்ணயிக்கலாம்.

160 நல்லவர்களுக்குக் கெட்ட பிள்ளை பிறப்பது ஏன்? அவர்கள் பழக்க வழக்கத்தாலும், சுற்றுப்புறத்தாலும்! நல்லவர்கள், செயலால் நல்லவர்கள். ஆனால், அகத்தால், எண்ணத்தால் கெட்டவர்கள். அதாவது கெடுதலை நினைப்பவர்களே.

161 சவரம் செய்து கொள்வதால் நம் சக்தி குறைகிறது. காரணம் மயிர் வளர்ந்து கொண்டே போவதில்லை. ஓரளவு வளர்கிறது. வளர்ந்து நின்று விடுகிறது. அடிக்கடி சவரம் செய்வதால் அந்த அளவுக்கு வளரவே செய்கிறது. அடிக்கடி கத்தியின் தொழில் நடப்பதால் குறைகிறது.

162 கையைவிட நான் காலைச் சுத்தமாக வைத்துக் கொள்ள ஆசைபடுகிறேன்.

163 சின்னா பின்னம் என்பதற்குச் சின்னாபின்னம் ஆக்குவது என்று பொருள்.

164 காற்று, மரம், செடி, கொடி அசைவதால்தான் காற்று அதிகமாக வீசுகிறது என்றும், மரம் செடிகள் இல்லையென்றால் காற்று வராது என்றும் நினைக்கின்றனர். பாலையிலும், கடலிலும் புயல் அடிப்பதைப் பாமரர்கள் நினைப்பதில்லை.

165 எதிர்காலத்தைப் பற்றி ஜாதகம், ரேகை பார்த்துக் கொள்பவன் முண்டம். எனக்குப் பார்க்கும் எண்ணம் உண்டு, பார்கிறேன். எல்லா மனிதனுக்கும் எதிர்

காலம் வளம் என்றும், ஒரு நல்ல காலம் வரும் என்றும் சொன்னால்தான் சந்தோஷப்படுவான்.

166 வெற்றியடைகிறவன் தன்னைவிடப் பலம் குறைந்தவனிடம் வெற்றியடைகிறான். அது எப்படி வெற்றியாகும்?

167 சிறுநீர் வருகிறது. ஆனால் மனம் வெளியே போ என்றால்தான் போகிறது. மூடி இல்லை, ஆகையால் மனோ சக்தி நடக்கிறது.

168 செவிடனைக் கூப்பிட்டால் திரும்பிப் பார்க்க மாட்டான். செல்வந்தன் காரில் கிளம்பியதும், கார், வேகத்தில் அதிக தூரம் போய்விடும். அல்லது காரில் கண்ணாடி அடைப்பால் காது கேட்காது. அவன் இயற்கைச் செவிடன்! இவன் செயற்கைச் செவிடன்!

169 ஆண்டவன் படைப்பில் எல்லாப் பொருள்களும் சமமே. மனிதன் விரும்புவது உயர்ந்ததெனக் கருதப்படுகிறது. இதிலும் ஒவ்வொருவன் ஒவ்வொன்றை விரும்புகிறான். அவன் விருப்பப்படியே ஒவ்வொன்றும் உயர்ந்ததே. ஆகவே ஒருவன் விருப்பம் உயர்வே ஒழியப் பண்டம் இல்லை.

170 1/8 = ½ கால் = கால்பாகத்தின் பாதி.

171 தடமாட்டம் அல்லது தடுமாற்றம் என்றால் தடம் மாற்றம் என்பதுதான். தடம் = வழி.

172 இறந்தவனைத் தவறி விட்டான் என்கிறோம். அவன் வாழத் தவறி விட்டான் என்பதே பொருள்.

173 உடம்பில் ஒரு பாகம் இரத்த ஓட்டம் இன்றி மரத்து விட்டால், அதன் பொருள், அப்பாகம் வேலை செய்ய அல்லது இயங்க மறுக்கிறது என்பதுதான்.

174 கெட்ட ஆவிதான், கொட்டாவி, கோட்டாவி என மருவியிருக்கும்.

175 செல்லாது என்றால் நம்மை விட்டுச் செல்லாது என்று பொருள். நம்மை விட்டு—ஒருவரை விட்டு ஒருவரிடம் சென்று கொண்டிருந்தால் செல்லும். செல்வம் என்பது அதுதான்.

176 தலைமயிரை இயற்கைப்படி விட்டுவிட்டால் அது உச்சி தெரியும்படி இருபுறமும் மடியும். காரணம் இயற்கையில் உச்சி திறந்திருக்க வேண்டும்.

177 தலைக்குப் பின்புறம் சிறுமூளை, மஞ்சாமுகம், பிடரி இருப்பதால் மயிர் அவைகளை மூடிக் கொண்டு ஒரு தற்காப்பாக இருக்கிறது. இயற்கை விதிப்படி முன்னே திறந்தும் பின்னே மூடியும் இருக்க வேண்டும். நாம் இயற்கையை மீறிக் கிராப் வைத்து உள்ளோம்.

178 நமது உடம்பில் உள்ள அல்லது ஏற்படும் கெட்ட நாற்றத்தைவிட வெளியில் வேறு துர்நாற்றம் அதிகமில்லை.

179 நம் உடம்பில் நல்ல நாற்றம் இல்லை. எல்லாம் வெளியில்தான்.

180 அறிதல்: ஒரு பொருளைப் பிரித்துப் பார்த்தல் இப்படிப் பிரித்தும் பிரித்துச் சிந்தித்தும் பார்ப்பதுதான், அறிவு.

181 மனிதன் வாழ்க்கைக்கு மிருகங்கள், செடி கொடிகள் உதாரணம் காட்டப்படுகிறது. காரணம் அவை உயர்ந்தவை. அவை பரிணாம வளர்ச்சியில் வந்த வழியாக இருப்பதாலும் இருக்கலாம்.

182 பசித்துப் புசி, அதே சமயம் பசிக்குப் புசி.

183 பழம்=பழையது என்பதே. காய், பழையது ஆகிப் பழம் ஆகிறது.

184 ஆதி மூலம்—ஆதி...மூலம். ஆதியில் மூலம்.

185 கண்கள் திறந்து கொண்டு பார்க்கிறதை விட மிகச் சிறிய அணுக்கள் கண்களை மூடிக் கொண்டு பார்க்கும்போது தெரிகிறது.

186 வைத்திய நிலையம் பல ரகத் துக்கங்களின் கூட்டு மடம். இன்பம் காட்டாது துன்பம் மட்டில் காட்டும் துன்ப தரிசினி.

187 செத்தை என்பது சற்று நாழி இருந்து மாறக் கூடியதால் அப்பெயர் வந்திருக்கக் கூடும். தீயில் இட்டால் உடன் சாம்பலாகிறது. மண்ணில், தானே சில நாளில் மண்ணாய்ப் போகப் போகிறது.

188 மாடியில் வாழ்ந்தும், படுத்தும் இருக்கிறான், மனிதன். பட்சிகள், மிருகங்கள் மரத்தின் மேல் வாழ்தலும், உறங்கலும் செய்கின்றன. இதில் என்ன பேதம்? இவன் செயற்கையில் உயரச் செல்லச் செப்பனிட்டான். அவை இயற்கையை உபயோகித்துக் கொள்கின்றன.

189 அதிகப் பாதுகாப்பு மனிதனுக்கே தேவை. மனிதனுக்கு மனிதனே அதிகம் பயப்படுகிறான். ஆனால், மிருகங்கட்கு இல்லை. மிருகங்கள் அவ்வளவு பயப்படுவதும் பாதுகாத்துக் கொள்வதும் இல்லை.

190 அகிம்சை என்பது மனித குண இயல்புக்கு மாறானது, இயற்கைக் குணம் இம்சையே.

191 மனித உடல் ஒன்றுதான் எதற்கும் உதவுவதில்லை.

192 பெண்களின் பின்பாகம், இடுப்பு முதல் தொடை பாகம் வரை, ஒரு தனி அமைப்பு.

193 குழந்தை முதல் விருத்தாப்பியம் வரை உடலின் ஒவ்வொரு பாகத்திலும் தெரிந்து கொள்ள முடியும்.

194 தமிழன் முதலெழுத்து 'த' வின் பெருமையே தனி! தந்தை, தாய், தமையன், தமக்கை, தங்கை, தம்பி, தனையன், தாத்தா.

195 உடம்பு உப்புகிறது. பிறகு இளைக்கிறது. எங்கிருந்து உப்பிற்று? அந்த உப்பல் எங்கு ஒடுங்கிற்று? விந்தைதான்,

196 பிறப்பது சிலநாட்கள், சிலமணிகளில் என்று அறியக் கூடும். இறப்பது நிச்சயம். ஆனால் எப்பொழுது என்பது தெரியாது. இறப்பதை ஊகிக்கக்கூட முடிவ தில்லை. அது நிச்சயமான ஒரு விஷயம்.

197 உயிர் என்பது மிகமிக நுண்ணியது. கண்ணுக்கும் விஞ்ஞானி கண்ணுக்கும் தெரியாத அவ்வளவு சிறிய அணு! ஏன்? யானையின் உயிர் எப்படி இயங்குகிறது. எந்தப் பாகம் உயிர்? எதனால் அசைவு? மிகக் கண்ணுக்குத் தெரியாத அணுக்கள் அசைக்கின்றன. உயிர் ஓட்டம். அதன் உயிர் எங்கே எவ்வளவு உள்ளது? எதனால் இயங்கு கிறது? யார் அறிவார் பராபரமே!

198 இயற்கையின் இரகசியங்களை எவ்வளவு ஆராய்ந்தாலும் அதன் உண்மையை முழுவதாக உணர்ந்து உறுதிகூற முடியாது.

199 செவிக்கு இன்பம் என்பது தவறு. செவி வாயிலாக மனதுக்கு இன்பம். எல்லா இன்பங்களும் இப்படியே.

200 வயதாவதன் அறிகுறி, முதுகு பின்புறம் சதை ழ்கீநோக்கித் தோங்கும்.

201 சில ஜீவன்கட்கு அவைகளைப் பாதுகாத்துக் கொள்ள அமைந்துள்ள நிறம், போன்ற வசதிகள், எதிரியின் கண்ணுக்குத் தெரியாமல், எதிரியின் பக்கம் வரும் சமயம் எதிரியை அடித்துத் தின்னவும் உதவுகின்றன.

202 மனிதனைக கொல்லும் ஜீவன்களை மனிதன் பெரும்பாலும் கொன்று தின்பதில்லை. கண்டு பயப்படுகிறான், இம்சை செய்யாமல் இருக்கும் அழகிய பிராணிகளைக் கொன்று தின்கிறான்!

203 உயிர்தான் இயங்குகிறது. அந்த உயிர் எப்படியிருக்கிறது? என்பதை யாரும் கண்டதில்லை. எது உயிர் என யாரும் கூற முடியாது.

204 மனம்தான் மனிதனை நடத்துகிறது. என்கிறோம். அந்த மனத்தையும் கண்டதில்லை. உயிரை ஆட்டும் மனதையும் புரிந்து கொள்ளவில்லை.

205 கடவுளையும் யாரும் கண்டதில்லை. புரியாததும், தெரியாததும்தான் உயிர், மனம். கடவுள்.

206 பலவற்றின் செயலை அறிகிறோம். ஆற்றலை அறிகிறோம், அதற்கு எது காரணம் என்பதைக் காண இயலவில்லை.

207 சங்கிலிருந்து எழுந்ததே சங்கீதம் போலும்!

208 இருட்டில் ஒளி புகுகிறதே தவிர ஒளியில் இருட்டு நுழைவதில்லை.

209 உடல்நலம், பலம், இவை நாம் அறியாமலேயே சிறுக சிறுகச் சேர்ந்து வலிவும், பொலிவும் தருகின்றன.

அந்தப் பலம் இழக்கப் படுகிறது. நம்மாலோ, இயற்கையாலோ, அதே சமயம் அதை மீண்டும் பெறவே முடியாது. கொஞ்சம் ஈடு செய்யலாம்.

210 காற்றே உயிர். காற்றால்தான் அசைவு, ஓசை, ஆசை.

211 உலகம் காற்றாலா? வெப்பத்தாலா? தண்ணீ ராலா? விண்ணாலா? மண்ணாலா?

212 காதின் மேல் பாகத்தில்மட்டும் அதிர்ச்சி, சத்தம் பட்டால் ஒலி பெருக்குகிறது. அதில் உள்ள செல்கள் தனித் தன்மையன.

213 மனித வுருவில் தலையை வைத்துத்தான் பெரும் பாலும் உருபேதம் காணமுடியும். தலைக் வைத்துக் தான் மனிதனை எடையும் போட முடியும்.

214 ஒன்றை ஐம்புலன்களோடு கிரகித்தால்தான் அவை அறியமுடியும். ஐம்புலன்களாலும் ஒன்றை விட்டால்தான் அதனை விடமுடியும்.

215 மனிதன் எந்த நிலையிலிருந்து பார்க்கிறானோ அதற்தேற்ப அவன் எண்ணங்கள் அமையும். எல்லாவிடங் களிலும் (கோணங்களில்) இருந்து பார்த்து முடிவுக்கு வருவதே நல்லது.

216 மனிதன் எல்லாவற்றையும் புரிந்துக் கொள் கிறான். ஆனால் மனிதனைப் பற்றித்தான் புரிந்து கொள்ள முடிவதில்லை.

217 எதைப் பற்றியும் சிந்திக்காமல் இருப்பவனுக்கு எதைப் பற்றியும் சிந்திக்க முடியும்.

218 மனிதன் மனோ சக்தியே மனிதசக்தி-

219 விஷமிருக்குமிடம் பல ஜீவன்களிடம் தெரிகிறது. ஆனால் மனிதனிடம் விஷம் இருக்கும் இடம் தெரிவ தில்லை.

220 தற்காப்புக்குப் பல ஜீவன்களிடம் அவயவங்கள் உள்ளன. ஆனால் மனிதனுக்கு அப்படி ஒன்றுமில்லை.

221 முன்பு மனிதன் எங்கேனும் போக நினைத்தால் நடக்க வேண்டும். இப்போது நினைத்து—பணமிருந்தால்—வாகனங்களில் உட்கார்ந்தால் அல்லது படுத்தால், இவன் நினைத்த இடத்திற்குப் போய் விடுகிறான். முன்பு ஞானத்தால் நினைத்த இடம் போனார்கள். விஞ்ஞானத்தால் தற்போது போகிறார்கள்! ஞானத்தால் நினைத்ததைக் கண்டார்கள். இன்று விஞ்ஞானத்தில் டெலிவிஷன் மூலம் இதைச் செய்கிறார்கள். ஞானத்தின் பரிணாமமும் முதிர்ச்சியுமேதான் விஞ்ஞானம்.

222 மண்ணில் உலோகங்கள் தோன்றினாலும் மீண்டும் மண்ணுக்கு நீண்டநாள் இரையாகாமல் இருப்பவைகட்குக் கூடுதல் மதிப்பு. பொன், வெள்ளி, வைரம்.

223 பல்லிகள் தம் வாலைத் தாமே துண்டித்துக் கொள்கின்றன. அவை துடிப்பதால் எதிரிகள் கண்டு திகைக்கின்றன. அதனால், அவை தப்புகின்றன.

224 எல்லாம் அறிந்தவர் எவருமில்லை. ஒன்றும் அறியாதவர் ஒருவருமில்லை.

225 பல யுகங்கள் ஓடியுள்ளன. ஆனால், மிகவும் மெதுவாக! ஒவ்வொரு வினாடியாக!

226 கலைஞனே (இஞ்சினியர்) தொழிலாளியாக இருந்தான், அந்தக் காலம். தற்போது கலைஞன் வேறு, தொழிலாளி வேறு.

227 மனிதனைப் போலவே எல்லா மிருகங்களும் நாவினால் வாயை நக்கிக் கொள்கின்றன. பறவைகள்

மூக்கைக் கீழே தேய்க்கின்றன. ஈ, கொசு போன்றவை கைகளால் துடைக்கின்றன.

228 தெரிந்தவனோ, தெரியாதவனோ, அவன் நடத்தையைப் பொறுத்தே அவன் அளவு உயருகிறது. எவ்வளவு தெரிந்திருந்தாலும் நடத்தையில் இல்லையெனில் தெரியாதவனே!

229 ஞாயமான மனோ சக்திக்கு மிக்க வலிமை உள்ளது.

230 உள்ளத்தை யாரிடமும் முழுமையாகத் திறந்து காட்ட இயலாது. பிறராலும் முழுமையாக தெரிந்து கொள்ள முடியாது.

231 ஆந்தை, பூனை இவைகளின் கண்களை மனிதன் கண்கள் ஒன்றில் பொருத்தி இரவில் கண் தெரிகிறதா எனச் சோதிக்க வேண்டும். என் அனுமானம்: கண் தெரியும். பூனைக்கண் உள்ளவர்களுக்கு ஒரு பூனைக் கண் பொருத்தினால் விகாரமாக இருக்காது. இதுவும் ஒரு யோசனை.

232 பல மிருகங்களின் சிறிய பிராணிகளின் தோல்கள் உரிக்கப் படுகின்றன. ஆனால், மனிதர்களின் தோலை உரிக்க முடியாது. இதைப் புரிந்து கொள்ளாமல் மனிதன் பிறரைப் பார்த்து 'உன் தோலை உரித்து விடுவேன்' என்கிறான்!

233 உலகம், சூரியன், சந்திரன் பலகோடி நட்சத்திரங்கள் அனைத்தும் பிணைந்தே உள்ளன. வெட்ட வெளி, ஆகாயம் இல்லாத இடமே இல்லை. இதன் தொடர்பில்லாமல் எதுவும் இல்லை.

234 உலகிலுள்ள அத்தனையும் ஏதாவது ஒன்றுடன் தொடர்புடையதே. தொடர்பில்லாதது எதுவுமில்லை.

235 உலகம் பல படத் தோன்றலும், மாறலும்தான்.

236 மனித அமைப்பைவிட ஒரு சிறந்த இயந்திரத்தை யாராலும், எப்பொழுதும் படைக்க முடியாது.

237 உந்த உலக இயக்கம் எப்படி நடக்கிறது என்று, உலகம் உள்ளளவும் யாராலும் அறுதியிட்டுக் கூற முடியாது.

238 பிரிக்க முடியாது என ஒரு கடைசி அணுவை யாரும் கூற முடியாது. அதே சமயம் அதனுள் இருக்கும் உயிர் ஓட்டத்தையும் உணர முடியாது.

239 எந்தக் காலத்திலும் இயற்கையைப் பூரணமாய் ஆராயாது, உணர முடியாது.

240 மனிதன் உலக இயக்கத்தின் சக்திக்கு எப்படி மனித உருவை (தேவி பராசக்தி) கொடுத்தான் என்று புரியவில்லை. ஆனால், ஆராய வேண்டும்.

241 காலைப் பொழுதும், மாலைப் பொழுதும் சூரியன் ஒளி ஒரே மாதிரி, ஒளி விட்டுக் கொண்டும், மங்கிக் கொண்டும் உள்ளது. காலை ஒளி வளருகிறது. மாலை இருள் கவ்வுகிறது. ஆனால், காலை குளிர்ச்சியி லிருந்து வெப்பத்திற்கு வருகிறோம். மாலை வெப்பத்தி லிருந்து குளிர்ச்சிக்கு செல்கிறோம்.

242 இருள் கவ்வுவதும், ஒளி மிளிர்வதும் இயற்கை யின் சிருஷ்டியில் எவ்வளவு மெல்ல நிகழ்கிறது தெரியுமா? எவ்வளவு அதிசயமான நிகழ்ச்சி! அனுபவித்து நுகர வேண்டும்!

243 கல்வி என்பது எழுத்தில்தான் இருக்கிறது என்று நினைப்பது, கொள்வது, கருதுவது பெரும் தவறு.

244 கல்வி எனில் ஒன்றைக் கல்லுதல், ஆராய்தல். ஆய்ந்து அறிதலே கல்வி.

245 பரவாயில்லை—தமிழ், பரவாலேது—கன்னடம், பராவா நை—உருது, பரவா லேது — தெலுங்கு.

246 கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும் மரம். கவைகள், கொம்புகள் உள்ளதுதான் மரம்.

247 மரம் முதலா, வித்து முதலா என்பதில் சந்தேகம் இல்லை. வித்தே முதல் என்கிறேன். ஆதாரம் காட்ட முடியும்.

248 இத்தனை கோடி மக்கட்கும் முதல், இரு உருவங்களே. ஆண், பெண் (ஆதாம், ஏவாள்). ஆனால், அவ்விரு உயிர்களைப் படைத்தவர் யாரோ?

249 இன்றும் தண்ணீரில் பல இடங்களில் செடிகள் அணு அணுவாய் வளர்கின்றன.

250 அணுவிற்கும் எடை உண்டு. எவ்வளவு வேகத்திற்கும் காலம் உண்டு.

251 மூல நோய்க்குச் சாதிக்காய், தேன், சந்தனம், சந்தனக் கல்லில் அரைத்துப் பாலில் கலக்கிச் சாப்பிடலாம்.

252 மனிதன் எந்த உயரிய மெத்தை மீது படுத்து இருந்தாலும் அவன் உண்மை மனம் நாடுவது சமதரையையே. காரணம் இயற்கை இயற்கையை நாடுவதுதான் இயல்பு.

253 காய்ச்சல் போன்ற சமயங்களில் நோயாளி மெத்தை—ஏன் பாயைக் கூட வெறுத்துத் தரையில் படுக்கிறான். அது இன்பம் தருகிறது போலும்!

254 தருமபுரி, ஓசூர் பக்கத்துப் பெண்கள் கருப்பு. பருமனே இல்லை. ஒரு மாதிரி குச்சிப் போன்ற உடற்

கட்டு, அழகிய சிறிய முகங்கள் ஆண்களும் அப்படியே. நல்ல உழைப்பாளிகள்.

255 வெந்நீரில் குளித்தால் அழுக்கு நிறைய வரும். காரணம், தோல் நெகிழ்ந்து மயிர்க்கால் விரிவடைந்து அழுக்கு வெளிவருகிறது. அதிக சூடு உடலுக்குக் கேடு. ஆனால், குளிக்கையில் இதமாக இருக்கும்.

256 இரண்டு பேர் சேர்ந்தால்தான் ஒன்று உண்டாகும். அல்லது கிடைக்கும். ஆண், பெண் சேர்க்கை ஒரு குழந்தை. இரு கை தட்டல் ஒரு ஒலி. இரு கம்பியால் கரண்ட். இப்படியே பல.

257 நாக்கு வழிக்க நம் நகங்களைவிடச் சிறந்த கருவி வேறு ஒன்றுமில்லை. நடுவிரல் நல்லது.

258 நுண் கருவிக்குத் தெரியாத சிறிய அணுக்களும் உள.

259 சொறி சிரங்கு—கையால் சொறியப்படும்சிரங்கு. சொறி சிரங்கு—அது, தண்ணீர் சொறியும் சிரங்கு.

260 குழந்தைகள், சிறுவர்கள், இளைஞர், பெரியவர்—ஒரு சிலரைத் தன்னுள் நிர்பந்திக்கப்பட்டுப் பார்க்கின்றனர். பார்க்கப்படுபவர்களிடம் ஏதோ ஆகார்ஷணம் உள்ளது.

261 எனது கண்ணை மிகப் பெரிய தனித்துறை வல்லுநர்கள் ஆராய வேண்டும். காரணம் அதிக தூசுகள் இலகுவில் அடைகிறது. அனைவரையும் கவர்கிறது. பலர் என் கண்ணைப் பற்றிப் பேசுகின்றனர். மனைவி அதிகம் பேசுகின்றாள்.

262 அமைதிக்கும் வேகமின்மைக்கும் நிறைய வித்தியாசம்.

263 சுறுசுறுப்பு வேறு; அவசரப்படுவது வேறு.

264 சோம்பல் வேறு; சும்மாயிருப்பது வேறு.

265 நல்ல மழையில் நனையலாம். ஆனால் நல்ல வெய்யலில் நனையக் கூடாது. (காயக் கூடாது) மழையில் துணி நனையும், வெய்யிலால் உடல் நனையும்.

266 மெய் மறந்து போதல் — மெய்யை மறந்து போதல்.

267 வயதாக ஆக உடல் சுகத்தை நாடுகிறது. என்பதல்ல. இளம் வயது அத்தனையும் தாங்குகிறது. வயதானால் சிரமங்களை உடல் தாங்குவது இல்லை. என் அனுபவம். (பிளேடு உதாரணம் ஷேவிங்)

268 நாழிகையைச் சேவல் காட்டுகிறது.

269 செடி, பறவை, மிருகங்கள் மணியை ஒழுங்காக அறிகின்றன.

270 மேகங்கள் விண் மீன்களை மறைத்தால் மனிதனால் மணி சொல்ல இயலாது.

271 சும்மாயிருக்கையில் மூச்சு விடுவதையும் மறக்கிறாய். ஆனால் விடுகிறாய். சும்மாயிருப்பதினின்றும் கலையும் சமயம் பெருமூச்சின் வேகம் தெரிகிறது. இது தான் மேற்கண்ட சந்தேகத்தைத் தருகிறது.

272 பூண்—நூல், பூணூல். பூணூலை அனைவரும் அணியலாம்.

273 எறும்பு முதல் பல ஜீவன்கள் மழை வருவதை அறிகின்றன. ஆனால், மனிதன்?

274 பசியால்தான் ஜீவன்கள் அசைகின்றன. பசியில்லையேல் உயிர்கள் ஸ்தம்பித்து விடும்.

275 ஆசைகளும், பாசங்களும்தான் ஆசாபாசங்கள் என்பது.

276 ஆயூர் வேதம் — ஆயுள் வேதம். தன்வந்தர் வேதம்தான் ஆயுள் வேதம்.

277 வாயையும் கண்ணையும் நாம் நினைத்தால் மூடலாம். காதை நம்மால் மூட முடியாது. பேசாமல் இருக்கலாம். பார்க்காமல் இருக்கலாம். தொடாமல் இருக்கலாம். ஆனால் கேட்காமல் இருப்பது கடினம்.

278 காலம் மிகவும் பொறுமையாகத்தான்போகிறது. சோம்பேறிக்கு பொழுது மிகவும் பொறுமையாகப் போவதாகவும், சுறுசுறுப்புக்காரனுக்கு பொழுது வேகமாகப் போவதாகவும் தோன்றுகிறது. அவனவன் மனநிலைக்கு ஏற்பவே.

279 எண்ணிப்பார். எண்ணுதல், எண்ணங்கள், எண்ணிப் பார்த்தேன்.

280 நினைத்துப் பார்த்தல் வேறு; எண்ணி பார்த்தல் வேறு.

281 'நிலம், பலம் இருக்கா?' என்றால், நிலத்தில் பலம் இருக்கா—அதன் பலன் இருக்கா? என்பது போலும் நிலம் புலம்?

282 'சொத்து பத்து இருக்கா?', என்றால் சொத்தும் பற்றும் (சொத்தும், சொத்தின் மீது கடனும்) என்பது போலும்!

282 'சொத்து பத்து இருக்கா' என்றால், சொத்தும் பற்றும் (சொத்தும், சொத்தின் மீது கடனும்) என்பது போலும்!

283 (Tooth) Paste is Waste.

284 Ever Silver, Never Silver

285 கார்த்திகை முழு நிலவு மிகவும் வெண்மை. ஒளி குளிர்ச்சியுடையது.

286 இயற்கை பல பழைய உயிரினங்களை அழித்தே விடுகிறது. அதற்கு மாறாகப் பல புதிய உயிரினங்களை உண்டாக்குகின்றது.

287 ஒவ்வொரு வினாடியும் புதுவருடப் பிறப்பே.

288 துன்பம் பெரும்பாலும் இயற்கை. இன்பம் தற்காலிகம். அதனால், இன்பம் கிடைக்கும் பொழுது அனுபவிக்க வேண்டும்.

289 நாம் அணுக்களைக் காண்கிறோம். ஆனால் பேரண்டத்தில் நம் உருவ அளவு அணுவே.

290 நம் உடலில் இனிப்புச் சுவையைத் தவிர ஏனையவை உள்ளன என உணர்கிறேன்.

291 சர்வோதயக் கதர்க் கடையால் நான் அறிவாளி யானேன். ஆனால் ஆற்றலை இழந்தேன்.

292 உடம்பிலுள்ள மிகச்சிறிய உறுப்புகளின் அவசியமும், பெருமையும் அது வலுவிழக்கும் போது அல்லது ஊனமுறும் போதுதான் தெரியும்.

293 வயதாக ஆக முடி முகத்தில் அதிகமாகவும், மர்மஸ்தானத்தில் குறைவாகவும் வளரும்.

294 அளவிட முடியாதது விசும்பே.

295 எண்ணம் உடலின் கூறுகளை இயக்குகிறது.

296 சில இயற்கைப் பொருட்களை மூடியோ, ஓர் இடத்தில் அசைவின்றியோ வைத்தால் உயிர்கள் தாமே உருவாகின்றன. இதை ஆராய்ந்தால் தேவையான ஜீவன்களை உற்பத்தி செய்யலாம்.

297 மண்ணில் அல்ல விண்; விண்ணுக்குள் மண்.

298 நமது இரத்தம் உடலுக்கு வெளியில் வந்து தோய்ந்தால் மண். அனைவருக்கும் தெரியும். உடலுக்கு உள் இரத்தம் கொட்டினாலும் மண்ணாகவே இருக்கிறது.

299 உலகமே அந்தரத்தில் இருக்கிறது. அதில் தான் நாம் வாழ்கிறோம்.

300 நினைவிழந்து இருக்கப் பழகின் நினைப்பவை நடக்கும்.

301 மனிதனைத் தவிரப் பெரும்பான்மையான ஜீவன்கள் இரவில் தூங்கிக் காலையில் முறைப்படி தாமே எழுகின்றன. மனிதனை எழுப்ப வேண்டும்! வேலைக் கேற்பத் துயிலை நீட்டிக் கொள்வான்.

302 நல்ல நாற்றம், கெட்ட நாற்றமாக மாறும். பின்னர், முடிவில், நாற்றமற்றுப் போகும்.

303 மனம் இயக்கும். மனம் தனியாக இயங்காது. மனம் இயங்க உடல் தேவை.

304 மனம் நினைக்கும். உடலும் இடம் தரவேண்டும். மனம் செயல்பட நல்ல உடல் தேவை. காரியங்கள் நடை பெற இரண்டும் தேவை.

305 நம் உடம்பில் உள்ள பாகத்தையே ஒரு வேலைக்கு உபயோகிக்க வேண்டும் என்றும் அந்தக் கையை இடது கை என்றும் அதற்கு மதிப்பு குறைவு என்றும் நினைக்கிறோம்.

306 இருப்பவர்கள் எண்ணிக்கையை ஓரளவு கூற லாம். இறந்தவர்கள் எண்ணிக்கைக்குக் கணக்கேயில்லை. பிறப்பவர்கள் எண்ணிக்கையும் கூறமுடியாது.

307 மிகச் சிறிய விந்தில் நமது உடல் அமைப்பு, உள் கூறுகள் யாவும் அடங்கியிருப்பது பெரும் விந்தை!

308 உலகிலுள்ள எந்தச் செயற்கை யந்திரங்களிலும் மனித உடலில் உள்ளது போன்ற அத்தனை நரம்பு, செல் கள் போன்ற கருவிகள் இல்லை.

309 மிக நுண்ணிய அணுவின் சக்தியில் ஆண்டவன் சக்தி அடங்கியுள்ளது.

310 ஆல விதையில் எவ்வளவு பெரிய மரம் இருக் கிறது. இது வித்திலா, வெளியிலா, யாரறிவார் பரா பரமே!

311 மனித இன அசைவுக்கே காரணம், அவனது உள்ளமும் இயற்கையில் அவனுக்கு வேண்டியவைகளும் தாம்.

312 மனித இனம் தவிர மற்ற உயிரினங்களைப் போல் இவனும் இயற்கையில் உயிர் வாழ உயிரினப் பெருக்கத்திற்கு மட்டில் தேவை யானதை உழைத்து அல்லது அழித்துப் பெற்றாலும் தவறில்லை.

313 மனிதன் ‘பாம்பே’ கக்கூஸில், சாதாரண கக்கூஸில் மலம் கழிக்கையில் நாற்றம் வீசுகிறது. ஆனால், இவன் கக்கூஸில் ஏற்கனவே உள்ள மலம் தான் நாறு

கிறது என நினைக்கிறான். இவன் மலம் மணக்கும் போலும்! (ஏற்கனவே உள்ள நாற்றமும் உண்டு)

314 மலம் வெளிவந்ததும் வெயிலில் பட்டதும் எவ்வளவு விரைவில் பல மாறுதல்களை அடைகிறது. வெளியின்—வெயிலின் இயற்கை அது!

315 இன்று, பாதம் சிறு பிஞ்சுகள் உதிர்ந்து கிடந்தன. மிகப் பசுமை நிறம். அவை, உயிர் ஓட்டப் பசும் பச்சை அட்டைகள் போலுள்ளன. மேற்கண்ட இளம் பிஞ்சுகளைக் கையில் எடுத்தேன். கணப்பொழுதில் பசுமை, கரும்பச்சை ஆகிவிட்டது. தரையில் நெடு நேரம் பசுமை மாறாமல் பல கிடந்தன. என்னே மனித இனம் தீண்டியதும் மாறுதல்!

316 ஒவ்வொரு மனிதன் பார்வை பரிசத்தில் வெவ்வேறு மாறுதல் உள்ளன. இவனும் இரசாயனக் கூட்டுத் தானே!

317 15-3-75இல் கடலூரில் திரு. சிட்டிபாபு வீணை. பாடகர், ஊது குழல், இவை எழுப்புவோர்கட்கு மூச்சுப் பிடிப்பது சிரமம். கையால் விரலால் இசைப்பவர்கட்கு அந்தச் சிரமம் குறைவு.

318 வீணையில் நாதம் ஒன்று உண்டு. ஆனால் நினைப்பதை மனம் பாடுகிறது. மனம் நினைக்கும் நாதத்தைப் பாடுகிறது. இப்படியே அனைத்து இசைக் கருவிகளிலும்.

319 கருவிகளைப் பாட வைப்பது மனதிற்குச் சிரமமும் திறமையும் ஆகும்.

320 சும்மா இருக்கையில், சற்று உணர்வுடன் பார்க்கையில், சுவாசம் சுழி முனையில் அதாவது மிகவும் மெது

வாக நீளக் குறைவாக மூக்கு முனை அளவு நடக்கிறது. இதுவே உடலுக்கு லாபம்.

321 சும்மா இருந்து கொண்டு சலனமின்றி நிசப்த மாய் நினைவுடன் எதைப் பார்க்க வேண்டுமாயினும் டெலிவிஷனில் போல் பார்க்கலாம். எந்தச் சப்தம் தேவையோ அதுவும் கேட்கும்.

322 சில பிராணிகளுக்கு இரவிலும் பகலிலும் கண் தெரிகின்றது. பல பிராணிகள், பறவைகட்கு இரவில் மட்டும்தான் கண் தெரிகிறது. அவைகட்குப் பகலில் கண் தெரிவதில்லை. எனவே, மனித இயல்புக்கே பகல், இரவு போலும்!

323 காற்றையே சுவாசித்துப் புசித்திருக்கலாம். உள்ளே அதிகம் இழுத்து வெளியில் கொஞ்சம் விடலாம். பழக்கத்தில் உள்ளே இழுத்துப் புசித்து வெளியிடுவது குறைந்துவிடும். வேகமாக இழுத்து மிக மெதுவாக வெளி யிடல், பூரணமாக உள்ளே சென்ற அளவு காற்று வெளி யாகாமல் பயில வேண்டும்.

324 இறைவன் உயிர்களின் பெருக்கத்திற்கே இன்ப உணர்வுகள் இல்லையேல் இன பெருக்கம் இருக்காது.

325 செய்வது இன்பத்திற்கு, ஆனால் நடப்பது இன விருத்தி.

326 அநேக உயிரினங்கட்குப் பெண்குறி சமீபம் மலத்துவாரம் இருக்கிறது. ஆண் குறிக்குத் தள்ளி மலத் துவாரம் உள்ளது.

327 ஆஸ்துமா வியாதி கொடியது. அது அகன்ற மறு வினாடியே அவ்வியாதி இருந்த இடமே தெரியாது. ஆகவே அது ஒரு வியாதியும் இல்லை எனவும் தோன்றும்.

328 குட்டிப் போட்டுப் பால் கொடுப்பன. முட்டை இட்டுக் குஞ்சு பொறிப்பன.

A) குட்டிப் போட்டுப் பால் கொடுப்பது சற்றுக் கூடுதலான பாசம். காரணம் வயிற்றில் உருவாதல் பின்னர் இரத்தத்தைப் பரவலாய் அளித்தல்.

B) முட்டை இடல் ஒருபற்று அற்றுப் போய் முட்டையில் உருவாதல். உரு வெளியாவது, முட்டையினின்று, தாயினின்று அல்ல. பாசம்குறைவே தொடர்பும் சொற்ப காலம்.

C) இரண்டிலும் தாய்க்கே வேலை. தந்தை யாரோ தெரியாது. தாய் வயிறுதான் குடியிருந்த கோயில்!

329 உடம்பிலிருந்து — உள்ளிருந்து வெளியிடும் அழுக்கே அதிகம், வெளியிலிருந்து உடல் மேல்படும் அழுக்கை விட..

330 தீப்பற்றியது தீ, தனித்து நிற்காது. எதையேனும் பற்றியே நிற்கும்.

331 சூரியன் தீப்பிழம்பு. தீயே தனித்து நிற்பதால் தான் மக்கள் வணங்குகின்றனர்.

332 என் கருத்து: அந்தச் சூரியன் தீப்பிழம்பு நடுவில் மூலமான ஒரு பொருளைப் பற்றியே எரிகிறது என்பது.

333 செவ்வாயில் இங்கு 2.45 — 3.15 சமயம் மாலை 7 அல்லது 7.15 எனக்குப் பட்ட கருத்து.

334 செவ்வாய் கிரகம் செந்நிற மண் என்கிறது இன்றைய அமெரிக்க அப்பலோ. நம் மூதாதைகள் அதனை அப்பொழுதே ஊகித்தனர். அத்தனை கிரகங்களுக்கும் நிறம் — குணம் கூறியுள்ளனர்.

335 வெள்ளம் தனியே வருகிறது. காற்று (புயல்) தனியே வீசுகிறது. ஆனால் தீ வருவதில்லை. தீ பற்றிக் கொண்டது, நெருப்பு பிடித்துக் கொண்டது.

336 தீ — தீயவன், தீமை. தீ கொடியது. அனைத்திலும் உள்ளது. இருப்பது தெரியாது.

337 சனிக் கிரகம் சூரியனிடமிருந்து வெகு தூரத்தில் உள்ளதால் அதன் ஒளி சனியில் படுவதில்லை. எனவே இருட்டு, அது கறுப்பு.

338 மனிதர்கள் தேசங்கள்தோறும் தட்ப வெட்ப நிலைக்கேற்ப மாறுபட்டிருப்பது போல மிருகங்கள், பறவைகள், பிராணிகள், செடி, கொடி, மரங்களும் வேறுபட்டு உள்ளன.

339 'தீயவை தீய பயத்தலால் தீயவை தீயினும் அஞ்சப்படும்' திருவள்ளுவர், தீயைத் தீயது என்றே கருதிவிட்டார். தீயின்றேல் உலகில்லை.

340 வானத்தின் நிறத்தைச் செயற்கையாக பிறராலும் தீட்டமுடியாது.

341 உடலுக்கு நோய் வருவதே, உள்ளுறுப்புக்களில் உள்ள கோளாறுகளை அறிவிப்பதற்கே.

342 மனோசக்தியால் மனிதன் தன் உடல்நலமின்மையைக் குணப்படுத்திக்கொள்ள இயலும். அதற்கு அமைதியும் திடமனமும் வேண்டும்.

343 வயதானதை முழங்கால் முட்டுச்சில்லுக்காட்டும். எலும்புகளின் மேலுள்ள கொழுப்புகளும் தேய்ந்து விடுகின்றன.

344 மருத்துவத்துறையில் அறுவை சிகிச்சை மிகவும் சிரமமானது. மருத்துவர் அதிகக் கவனமும், அக்கறையும்,

கஷ்டமும் படவேண்டி இருக்கிறது. அதனால்தான் மக்களும் அறுவை சிகிச்சை மருத்துவரை அதிகம் நேசிக்கின்றனர், வணங்குகின்றனர்.

345 உலகம் அனைவரும் வாழும் ஒரு நாடாக — ஏன் ஒரு வீடாக — விரைவில் ஏற்படும். நினைத்தால் பார்க்கலாம். கேட்கலாம். பேசலாம். போகலாம். வரலாம்.

346 முடிந்தவரை கண்களை மூடிக்கொண்டு கண்ணுக்கு ஒய்வு தருவது நல்லது.

347 பயணம் செய்யும்போது கண்ணை மூடிக்கொண்டிருப்பது நலம்.

348 ஊறுகாய் சுவைதான். ஆனால், உடலுக்கு ஊறுதான்.

349 ஆற வைத்து குடிப்பதினும் ஆற்றிக் குடிப்பது மேல்.

350 நாம் கருதும் மிகவும் சிறிய ஜீவராசிகள் நம்மை விட மிக நுண்ணறிவும், முன்னெச்சரிக்கையும் உடையவைகளே.

351 கால்நடை டாக்டர்கள், குழந்தை டாக்டர்களை விட, மதியூகம் உள்ளவர்கள். மனிதனுக்கு வரும் நோய்களை மனிதனாகிய டாக்டரால் ஊகிக்க முடியும். ஆனால், மிருகங்களுக்கு வரும் நோய் பற்றிக் கூறுவது சிரமம்.

352 பல் துலக்கும் பிரஷ்ஷை நனைத்துப் பிறகு பசை வைத்துப் பல் துலக்க வேண்டும்.

353 உடல் திடமாக இருக்கையில் குத்துக்காலிட்டு உட்காருவது சிரமமாக இருக்கும். ஆனால், வயோதிகம், பலகீனம், உடல்நோய் — சமயம் குத்துக்காலிட்டு உட்காருவது வசதியாக இருக்கும்.

354 மனிதன் அதிக நேரம் உடலையும், மனதையும் வெட்டவெளியில் வைத்திருப்பது நலம்.

355 ஜிப்மர் மருத்துவமனை. ஆப்ரேஷன் தியேட்டர் மருத்துவர்கள் பச்சைத் துணி அணிகின்றனர். ஜன்னல் துணிகள் பச்சை. பச்சை வலியைக் குறைக்கும். முள் எடுக்கும் முன்னர் பச்சை மரத்தைப் பார் என்பதுண்டு.

356 1½ செ. மீ. நீளத்திற்கு ஒரு சிறிய பருத்தி நூல் போன்று காணப்பட்டது. காற்றில், துரும்பு என எண்ணி னேன். பின்னர் அது வேகமாகப் பல கோணங்களில் திரும்பிய பின்னரே அது ஒரு அதிசய உயிர் என உணர்ந் தேன்.

357 இரு குழந்தைகள் இறந்துவிடின் மூன்றாவது குழந்தைக்கு மூக்கு குத்துகின்றனர். அதிக பிராணவாயு உள் செல்லாமல் இருக்கவோ? மரணம் கூடுதல் பிராண வாயுவாலா?

358 அதி காலையிலும், தூக்கம் வரும். காரணம் நினைத்து நினைத்துக் களைத்துப் போவதால் தானே அயர்ந்து விடுகிறது. இதுவே கண்ணயர்வு.

359 மனம் சும்மா இருக்கும் பொழுது, தூக்கம் மனிதனை அனைத்துக் கொள்கிறது.

360 மெய் ஞானத்தால் அஞ்ஞானத்தை அகற்றுவதை விட விஞ்ஞானத்தால் அதைச் சுலபமாக அகற்றி விடலாம்.

✶

# தத்துவம்

1 இன்னல் பட்டால் சுகம் உண்டு.

2 நொடிக்குள் உலகம் முதல், யாவும் மாறும்.

3 உண்மையை உலகம் எளிதில் புரிந்து கொள்ளாது.

4 உலகம் மாயை நிறைந்தது மட்டுமல்ல, மனித சூழ்ச்சி மிக மலிந்த மடம்.

5 வாழ்க்கையே துன்பம்; அதனுள் தான் இன்பம்.

6 தைரியம் தான் வாழ்க்கையின் ஜீவநாடி. அது பிறவியில் இருக்க வேண்டும்.

7 உண்மை உரைத்தால் உலகோர் வெறுப்பர்; ஆனால் உன் மனமும் உண்மையின் உறைவிடமான இறையும் ஆனந்தம் அடையும்.

8 உலகம் உன்னை விரும்புவதற்காக உண்மையின் திண்மையை விடாதே.

9 'ஓம்' என்ற சொல்லே ஒருவன் ஆயுளை வளர்க்கப் பலம் தரும் மருந்து என்பது என் முடிவான எண்ணம்.

10 'ஓம் சாந்தி' என்று மும்முறை உச்சரிக்க வேண்டும். அடிக்கடி இதை உச்சரிப்பதால் கோபமும், காமமும் குறைகின்றன என்பது என்அனுபவ சித்தாந்தம்.

11 துன்பமும், இன்பமும் ஒன்று என்றால் அது துன்பம் அல்லது இன்பம் என்ற ஒன்றாக இருக்க வேண்டும்.

12 நல்லதன் உச்சியைக் கடவுள் என்கிறோம். (கிருஷ்ணன், ராமன், காந்தி) அது ஒரு பெரிய பட்டப் பெயர். பரம்பரை பரம்பரையாக மனிதர்கள் நல்லவர்களுக்கு அளிக்கும் பெயர்.

13 மலமும் மாணிக்கமும் ஒன்றுதான்.

14 வெற்றியென்பது மற்றவனின் கேள்வி. ஆகையால் வெற்றி உண்மையா? தோல்வி உண்மையா? இரண்டும் உண்மையா? ஒன்று இரண்டாகப் பிரிகிறதா?

15 நாம் நினைக்கும் நல்லவை, சுயநலத்திற்கோ பிற நலத்திற்கோ நடக்கும் வரை. நாம் நல்ல எண்ணம் உடையவர்கள் அல்லது யோக்கியர்கள் என்பதுதான் நீதி.

16 சிலர் பலஇடங்களில் தருமம் செய்துவிட்டுத் தங்களின் பெயர்களை எழுதிக்கொள்கின்றனர். நான் தருமம் செய்தால் அடியில் ‘ஒரு கெட்டவன்’ என எழுதிக் கொள்வேன்.

17 போகங்களை வெறுப்பதே யோகம்.

18 கண்ணை மூடிக் கொண்டு மனதைத் திறந்து கொண்டிருப்பதைவிட மனத்தை மூடிக் கொண்டு கண்ணைத் திறந்து கொண்டிருப்பது பன்மடங்கு மேல்.

19 ஒவ்வொரு மூச்சிலும் நீ ஒவ்வொரு அடி சவக்குழியண்டை செல்கிறாய் என்பதை உணர். மூச்சை அடக்கினால் நீ மேல்கொண்டு சவக் குழியண்டை செல்லாமல் இருக்கலாம்.

20 வாழ்க்கையில் எந்த நிலையையும் எதிர்பார்க்கிறேன். வரின் எல்லாவற்றையும் ரசிக்கவே நினைக்கிறேன்.

21 குற்றம் இல்லையேல் கூற்றம் இல்லை.

22 உலகில் உண்மையில் நடக்க இருப்பது சாவு. அதாவது சாவு நிலையான உண்மை.

23 எங்கும் நிலவியுள்ளது சூன்யம்! சூன்யமே கடவுள்.

24 ஒருவன் சாக மற்ற ஒருவன் சந்தோஷப்படுகிறான். ஒருவன் பிறக்கும் பொழுதும் ஒருவன் சந்தோஷப்படுகிறான். சந்தோஷம் பிறப்பிலா? இறப்பிலா? வாழ்விலா? சாவிலா? எதிலும் இல்லை. அல்லது எல்லாவற்றிலும்.

25 சந்தோஷம், துக்கம் செயலில் இல்லை. கருத்தில்.

26 மனிதன் 'மனிதனாக' விளங்க வேண்டும். உருவத்தில் மனிதன், தான் "அறிவில்" மனிதனாக வேண்டும்.

27 மண்ணில் தோன்றி மண்ணில் மறையும் எதுவும் மண்ணையேதான் நல்லது என்றும் தீயது என்றும் கருதும். நரகமும், மோட்சமும் இடம் ஒன்று; அனுபவிக்கும் விதம் வேறு.

28 உறுதி உய்வளிக்கும்.

29 கொடுக்க வேண்டுமென்ற (நிஷ் கலங்கமாய்) எண்ணம் இருந்தால் வந்து கொண்டேயிருக்கும். எல்லாவற்றிலும் உன் அறிவை ஆழ்த்து.

30 சிந்தனை அற்றிருப்பது சிந்தனைக்கு உரம்.

31 கருத்தைச் சொல். தவறிருந்தால் திருத்திக் கொள். எதிரியிடம் குற்றம் இருந்தால் உணர்த்து. வாதம் வரின் நிறுத்திக் கொள். வாதம் பிடிவாதமாக விரோதமாய் முடியும்.

32 பேதமற்றிரு. "பேதம் அற்றதே போதம்" பேதம் பாரோட்டுவோர் இருப்பின், நீ காத தூரம் எட்டிக் கொள்.

33 வேதம் யாவும் அறிவுடைய மனிதன் வகுத்த நீதி.

34 எந்த உயிர் மாறுதலையடையும் பொழுதும் சுற்றுப்புறத்தில் சாந்தம்—அமைதி—நிலவும் என்பது கண் கூடு. எல்லா சமயங்களிலும் இது நிகழும். வீடுகளில் பிரியும் பொழுது அனேகமாக அழாமல் கவனிப்பார்கள். பின் அழுவர். இது இயற்கை நீதி என்க.

35 நன்கு ஆத்ம ஞானம் உள்ளவனுக்கு இதன் காரணமாகவே சதா சாந்தமும், அமைதியும் நிலவுகிறது. காரணம் சதா ஆத்மா மாறிக் கொண்டே யிருக்கிறது.

36 ஒன்றில் எல்லாம்! எல்லாம் ஒன்றில்!!

37 உன் உடல் வெந்தாலும் சிந்தையைச் சிந்தை யிருக்கும் வரை சிதைத்துக் கொள்ளாதே.

38 குழந்தை இல்லை என்ற விசனத்தைக் காட்டிலும் பிறந்து இறந்தால் வெகு விசனம். ஆகையினால்தான் ஒரு பழம் பெரியார், பிறவாமல் இருக்க வேண்டும். பிறந் தால் இறவாமல் இருக்க வரம் வேண்டுமென்றார்.

39 உன் நினைப்பு உன் உலகம்.

40 நினைப்பே நீ.

41 அறிவே ஆண்டவன்; அறிவை ஆண்டவனே ஆண்டவன்.

42 வாழ்க! வளர்க! ஓங்குக, உய்க! என்றே சொல்.

43 'ஒன்றும் இல்லை' என்பதே கடைசி. அதற்கு முன் ஒன்று உண்டு எனத் தோன்றும். 'இரண்டுமில்லை' என்பாரில்லை.

44 இயற்கை எழிலில் மயங்காத உயிர்கள் இல்லை. அதை உடன் வணங்கவும் தோன்றுகிறது.

45 இயற்கையை எதிர்க்க யாராலும் முடியாது!

46 சோம்பேறியாவதற்குக் கூடுமானவரைத் திட சித்தம் வேண்டும். மனச் சோம்பேறியுமானால் தேவரா வான் யோகி. உடல் அமைதியை விரும்புபவன் சோம்பேறி எனப்படுவான் —தூற்றல். மன அமைதி விரும்புபவன். சாந்த புருஷன் போற்றல். இரண்டுக்கும் சம்பந்தம் உண்டு, ஒன்று ஒன்றைக் கொணரும்.

47 பிறந்து வாழ்ந்து மாறுதல் சிலருக்கு; பிறந்து இருந்து மாறுதல் பலருக்கு.

48 மனிதன் ஒவ்வொருவனும் முன்னோக்கித்தான் செல்கிறான். அவன் நோக்கம் முன்நோக்கமே உதாரணம். ரயில் வண்டிப் போகையில் எதிரில் உள்ளதையே பார்க்க நினைக்கிறான். வண்டி செல்லுமுன் அதையே பின்புறம் பார்ப்பதில்லை.

49 நல்லது மேலே கெட்டது கீழே, சுவர்க்கம் மேலே நரகம் கீழே.

50 சின்ன சங்கடங்களில் கூட மனிதன் சாவு என நினைத்தே அஞ்சுகிறான். காரணம், நிலையானது சாவு. சாக வேண்டியவன். இருப்பினும், அதை நினைக்கக் கூடாது.

51 'நாம்' என்பது என்ன என்று சிந்தித்தால், ஒன்றும் இல்லை என்ற முடிவே வரும். வீடு, ஆகாரம் எல்லாம் எதற்கு?

52 சில நிமிஷங்கள் கண் மூடி ஏகாந்தமாய், மவுன மாய்த் தியானத்தில் அமர்ந்தால், சில நிமிஷங்கள். எண்ணிய நுண்ணிய பலனை அடையும்.

53 ஒருமணி நேரம் சிந்தனை சிதறாமல் ஒன்றில் அல்லது சூன்யத்தில் சுகமாய் இருப்பதே யோகம், சக்தி, முக்தி!

54 பிறப்பில் இறப்பு; இறப்பில் பிறப்பு, ஒன்றில் இரண்டு.

55 ஆத்மார்த்தமான முன்னேற்றத்திற்கு வேர் போலிருப்பது நம்பிக்கை. நன் நம்பிக்கை வேண்டும்.

56 எதையும் வேண்டாது நிம்மதியாய்ப் பூசிப்பதே உத்தம பூசை என நான் நினைக்கிறேன்.

57 உயர்வை உணர்; தாழ்வை நாடு.

58 "சொல்லாமலே செய்வார் பெரியார்". அது கடவுளைவிட வேறு யார்? ஆகையால், நீ வேண்டாமல் வணங்கு. வேண்டுவது, வேண்டாதது என உணர்ந்து தருவான்.

59 சமத்துவம் சாவிலேதான். வாழ்வது எதற்கு? சாவதற்கு. ஆகவே வாழ்க்கை எப்படி இருப்பினும் எனக்கு ஒன்றுதான்.

60 ஆண்டவனின் பயிர்களே உயிர்கள்.

61 யாருக்கும் புறத்தோற்றம் பல; அகத் தோற்றம் ஒன்றே.

62 வினாடிக்கு வினாடி இன்பம் துன்பம் வந்து கொண்டிருக்கின்றன.

63 "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்". இதையேதான் இரணியன், பிரகலாதனிடம் 'இரண்ய நமோ' என்றான் போலும்! பிரகலாதன் சிறந்தவன். யாவற்றிற்கும் தந்தையை 'நாராயண நமோ' என்றான்.

64 தூங்கும் போது மனிதனை யார் காப்பாற்று கிறானோ அவன், விழிப்பிலும் காப்பாற்றுவான் என்பதை உணருவதில்லை.

65 ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு மனிதனுக்குப் பிரதிபலிக்கும் கண்ணாடியே.

66 சிவலிங்கமும் சிலுவையும் ஒன்று. பார்வையிலும் அமைப்பிலும்.

67 மனிதன் ஒருவன் எல்லாமாய் இருக்கிறான். கொலைஞன், கலைஞன், திருடன், நீதிமான், வைத்தியன், நோயாளி, குழந்தை, கிழவன்.

68 பயம் தான் பயமின்மைக்குக் காரணம்; பயம் இல்லை என்றால், பாபம் என்பது இல்லை.

69 ஒரு இடத்தில் வானொலி நிலையம். பல இடத்தில் குரல் கேட்கிறது. மின்சாரம் ஒன்றுதான். அது பலவற்றை இயக்குகிறது. ஆண்டவன் ஒருவன். ஏன் எல்லாமாய் இருந்து ஆட்டுவிக்கக் கூடாது என்பதை யோசியுங்கள்.

70 மனிதன் பிறந்ததும் நிலையானது சாவு கொஞ்சம் அறிந்தவர்கள், இதை உணர்வர். இருப்பினும், 'வாழ்வோம்' எனும் எண்ணம் உண்டாவதால்தான் உலகம் நடக்கிறது. இதுவே உண்மை. இருந்தும் மறக்கப் படுவது தெரிந்தும் தெரியாதிருப்பதே மாயை!

71 மனிதன் சாக்ஷியாகத்தான் இருக்க முடியும். எல்லாவற்றிலும் தானே முடிக்க எண்ணுகின்றான். முடிய வில்லையானால் தன்னைவிட உயர்ந்த சக்தியிடம் சாக்ஷி சொல்கிறான்.

72 பலதடவை கண்ணாடி பார்க்கிறாய். சில தடவை யாவது மனக்கண்ணால் உட்புறம் பார்.

73 ஒவ்வொரு மனிதனும் ஒரு நாளைக்கு ஒரு தரமாவது உண்மை நிலையைச் சிந்திக்க வேண்டும்.

74 வாழ்க்கை கற்பூரம் போன்றது. தரையில் கற்பூரம் யாராலோ கொண்டுவந்து வைக்கப்படுகிறது; ஏற்றப்படுகிறது; எரிகிறது; உடன் அணைகிறது: இடம்கூடத் தெரிவதில்லை.

75 மனிதன் 'ஏதோ காலம் தள்ளுகிறேன்' என்பான். அப்படியல்ல, மனிதனைக் காலம்தான் தள்ளிக் கொண்டே போகிறது.

76 அழிக்கும் சக்தியும் ஆண்டவனிடம் உள்ளதால் தான் மனிதன் பயப்படுகிறான்; வணங்குகிறான்.

77 மனிதன் அன்புக்குப் பயப்படுவதைவிட அழிவுச். சக்திக்குத்தான் பயப்படுகிறான்.

78 மனிதன், ஆண்டவனிடம் எல்லாம் உள்ளதால், அன்பைக் கண்டே, அன்புக்கே பயன்பட்டுப் பக்தி காட்ட வேண்டுகிறேன்.

79 மரணம்தான் வாழ்வில் ஒரு மகத்தான காரியம். மரணத்திற்குப்பின் மனிதன் இல்லாமல் போகிறான். மனிதன் இல்லாமல் போகிறான் என்றால், மனம் அற்றுச் சடலம் அற்றுப் போகிறான்.

80 மனிதன் சாவிலேதான் சாந்தி காண்கிறான். அப்பொழுதும் சாந்தியாய்ச் சாக விரும்புவதில்லை, மிகவும் கஷ்டப்பட்டே சாகிறான்.

81 மனிதன் வாழ்வில் வெற்றியென்பதே இல்லை. சிந்தித்துப் பார்க்கையில் கடைசியில் தோல்வியே.

82 உடல் அழகின்றி உடுப்பு அழகாயிருக்க விரும்புவது வருந்த வேண்டியதே; உள்ளம் அழகின்றி உடல் அழகாயிருக்க விரும்புவது துக்கப்பட வேண்டியதே.

83 நாம் ஏதாவது ஒன்றைச் சுமக்கும் பொழுது, எப்பொழுது வைப்போம் என்றெண்ணுகிறோம். நாம் உடுத்திக் கொள்ளும் உடையே சுமையாக இருக்கிறது. கழட்டும் போது நிம்மதி ஏற்படுகிறது. அதேபோல் இந்த உடம்பைச் சுமப்பதே பெருஞ்சுமை என்ற உண்மை விளங்குகிறது.

84 தன்னால் நடத்த முடியும் என்றே பல காரியங்களை மனிதன் நடத்துகிறான். அதே சமயத்தில் 'எப்படியாவது போகட்டும்' என்று தன்னால் முடியாத நிலையையும் உணர்கிறான்.

85 இவனைக் கொண்டு சில காரியங்கள் நடத்தப்படுகிறதே யொழிய, இவனால் ஒன்றும் நடத்தப்படுவதில்லை.

86 இன்று 8. 12. 49 எனக்கு இரவு 2.55க்கு பெண் மகவு பிறந்தது. அதன் பெயர் 'ஓம் சக்தி'.

87 3. 9. 50 இரவு பெரிய காட்டுப் பாளையம் நண்பர் M. ராஜாராமும் நானும் சித்தாந்தம் பேசியே கழித்தோம்.

88 மேல் குமாரமங்கலம் ஐயர் நல்ல தோற்றம். வயோதிகர், வீராசாமி ஐயரிடம் அஸ்ஸாம் பூகம்பத்திற்குப் பணம் கேட்டேன். என்னை, நீங்கள் சொல்லுங்கள் என்றார். ரூ 1-00 என்றேன், எப்படி நான் நினைத்ததைச் சொன்னீர்கள் என்றார். 'ஆத்ம சக்தி' தான் என்றேன். என் விலாசம் விசாரித்தார்.

89 18. 11. 50 இரவு 9மணிக்கு என்தாய் திருச்சியில் உள்ள தங்கையைப் பற்றி வினவினார். நான் கண்ணை மூடிக்கொண்டு ஆத்ம சக்தியைக் கேட்டேன். என் கண் முன் தங்கையின் குழந்தை உட்கார்ந்து கொஞ்சும், தெளிந்து விளையாடும் காட்சியைக் கண்டேன். அதுவும் பத்து தினமாக. இதை அப்படியே சொன்னேன். 12. 30

மணிக்கு அவர்கள் வந்தே விட்டார்கள். குழந்தை 10 நாளாய் தெளிந்து உட்காருவதாக - உட்காருவதைக் காட்டினார்கள். என் குடும்பம் என்னை வியந்தது.

90 ஒரு போலீஸ் சேவகர் இன்று காலை [3. 4. 51] ஓர் குரைத்த நாயை அதிகம் அடித்தே கொன்றார்! அடிக்கையில் பார்த்த மக்கள் பரபரத்தனர்! பல நாய்கள் குரைத்தன! பின் அடிபட்ட நாய் ஆத்மா பிரிகையில் நிசப்தம் நிலவியது! சாகும் (மாறும்) எல்லா இடங்களிலும் இது நிகழும்; கவனிக்க.

91 சாகப் பிறந்தவன் வாழப் பிறந்தவனாய் வாழ்கிறானே, அதுதான் மனித வாழ்க்கை.

92 வைசூரி, அம்மை போட்டால் தலைக்குத் தண்ணீர் விட்ட தினத்தில் 'மாரியாத்தா மாவு' வழங்கப் படுகிறது. அதில் அவசியம் சொற்ப அளவில் கிருமிகள் கலந்தே இருக்கும். ஆகையால்தான் அக்காலத்தில் அன்னையர், பெரியவர், 'மாரியாத்தா மாவு வாங்கிக் கொள்' என்றனர் போலும். இது நோய் தடுப்பு முறை.

93 சமுத்திர அலைகட்குக் கூட அமைதி உண்டு. தீவிர சிந்தனையுடைய மனத்திற்கு ஒரு க்ஷணம் கூட அமைதியில்லை.

94 ஆண்டவன் ஆலயங்களில் பக்தர்கள் நுழைந்ததும் யாவருக்கும் திருநீறு அளிக்கப் படவேண்டும். அதில் கூடப் பேதம் இருக்கிறது. இல்லையேல், பலி பீடம் எதிரில் பெரிய மடலில் திருநீறு வைக்கப்பட வேண்டும்.

95 நினைவே நீ. நினைவில்லையேல் (நினைவற்றுப் போனால்) நீ யாரோ.

96 முதலில் இன்பம் என்றால் பின்னால் துன்பமே. முதலில் துன்பம் என்றால் பின்னால் இன்பம் தான். இரண்டும் ஒன்றே.

97 நல்ல சலவைத் துணி உடுத்துபவன் நல்லத் துணி தாங்கி. அழுக்கு உடை உடுப்பவன் அழுக்குத் துணி தாங்கி.

98 வாழ்க்கையே அமைதிக்குத் தான். அது வயதாகியும் வரவில்லையென்றால் வாழ்ந்தது வீணே.

99 கண்ணீர் விடாதவன் மனிதன் அல்ல.

100 கடவுள் என்னை மிகவும் நேசிக்கிறார். மனிதனின் மனம் தன்னலத்தையே நாடும்.

101 எல்லோரும் தனக்குக் கேட்க ஆளிருப்பாதாகவே நம்புகின்றனர். எல்லாவற்றிற்கும் மேலான ஆண்டவன் நமக்காக இருக்கிறான் என்பதை நினைப்பதில்லை.

102 உள்ளத்தைக் காலியாகச் சலனமின்றி வைத்திருந்தால், அது தெய்வீகம் வளரும் இடமாக இருக்கிறது.

103 மனிதன் இறந்ததும் பிணமாகிறான். மனிதன் பெயர் மறைந்து விடுகிறது. மற்ற ஜீவராசி இறந்தால் அதன் பெயர், பிணம் உள்ளவரையிலாவது உள்ளது.

104 யாருடைய ஏற்றத்தையும், யாருடைய தாழ்வையும் மாற்ற இயலாது.

105 உலகில் கண்ணுக்குத் தெரியாத எல்லாவற்றிற்கும் ஒரே மதிப்பு, ஒரே எண்ணம். உதாரணம் கடவுள். உண்மை, அன்பு, காதல், பசி, காமம் போன்றவை.

106 பிள்ளையை உண்டாக்கியவன் 'என் மனைவிக்கு குழந்தை பிறந்தது' என்கிறான். குழந்தை இறந்தால் 'என் பிள்ளை செத்தது' என்கின்றான்.

107 உண்மையில் கடவுளை நம்புபவன் அவனிடம் தன்னை அர்ப்பணித்து நிம்மதியாய் இருப்பான். வணங்கினாலும் வணங்குவான், நிர்ச்சிந்தையாய்.

108 அன்பின் எல்லை, காமத்தின் எல்லை; கோபத்தின் எல்லை; பக்தியின் எல்லை. எல்லாவற்றின் உச்ச ஸ்தானத்தில் நாம் சகஜநிலையை மீறி மாறி விடுகிறோம். அதுதான் ஆண்டவன் லீலை அல்லது மாயையின் மகிமை. ஒவ்வொன்றிலும் தன்னைத் தன் சுற்றுப்புறத்தை மறக்கிறோம்.

109 சாவு ஒரு பெரிய சங்கதி. ஆனால் பெரும்பாலோர் சவத்தை வேடிக்கை பார்த்துக் கொஞ்சமும் சலனமின்றிச் செல்கிறார்கள். என்னே மாயையின் சக்தி!

110 பிறப்பும் இறப்பும்தான் மகத்தானது. இரண்டும் ஒரு முறைதான் நிகழும்.

111 இறப்பு வேண்டாம் என்றால் பிறப்பும் கூடாது.
பிறந்தது எல்லாம் இறந்தே ஆக வேண்டும்.
தோன்றியது யாவும் மறைந்தே தீரும்.
ஆக்கியவை யாவும் அழிபவையே.

112 மனிதன் அவனை அறியாமல் சீக்கிரம் சாகத் துடிக்கிறான். வேகமாகப் பஸ், ரயில், கார், மோட்டார், பிளேன், நீச்சல், கப்பல், காதல், குடி—பல விஷயங்களில். ஆனால், இறைவன் சாகவிடுவதில்லை, நாள் வரும் வரை.

113 சம்பாதிக்கும் போது சிந்தித்தால் அவன் யாருக்குச் சம்பாதிக்கிறான் என்று அவனுக்கே தெரியாது. சாப்பிடுகிறவர்கட்கும் தெரியாது, யாருக்காகச் சம்பாதிக்கிறான் என்று. உண்மையில் கடவுள் வேலை யாருக்கும் புரியவில்லை!

114 வயதாக வயதாக இயற்கை உடல் உறுப்புகள் தேய்ந்து அது மடியப் பக்குவமடைகின்றன. ஆனால், மனிதன் எண்ணம் மட்டும் இவ்வளவையும் பார்த்தும்கூட அது வாழவே எண்ணுகிறது. மனம் அதன் வேகப்படுகிறது. மரணத்திற்கு முன் அடங்க வேண்டியவை உறுப்புகள் அல்ல, மனம். ஆனால், பாழும் மனம் உயிர் போன

பின்தான் அடங்குகிறது. அல்லது எதைப்பற்றிக் கொள்கிறதோ ஈசனே அறிவான்!

115 நடுவாக மனத்தை இருக்கச் செய்வதே மனசாட்சி.

116 மனம் தன்னை மறந்து மற்ற எதையும் வேகமாகப் பற்றும். அதனால் எதையும் பற்றாமல் சும்மா இருக்கவே இயலாது.

117 Late Kuppusamy என்பது விசித்திரம். சாகாதவர்தான் late, செத்தவர் before.

118 அதிகாலை எழுகின்ற கதிரோன் வளர்ச்சியும், அந்தியில் அஸ்தமன சூரியன் மறைவு வேகமும் கண்ணுக்கு நன்கு தெரியும். நம் வாழ்வில் குழந்தைப் பருவமும் முதுமைப் பருவமும் இப்படியே தான்.

119 மறைந்து போதல் ஒரு மாயை. இறந்தவரை மறந்து வாழ்கிறோம். நாம் இறக்கப் போவதை மறந்தே வாழ்கிறோம்.

120 வாழ மறந்து போவதுவே இறந்து போவதும்.

121 ரசிப்பவனால்தான் ஆண்டவனை — இயற்கை அன்னையை 'ரசித்து'ப் பூசிக்க முடியும்.

122 ஆசை இருந்தால், தானே பூசை நடக்கும்.

123 மாயையை வெறுக்காது, மாயாவை, மகா சக்தியை ரசி. அதிலேதான் ருசி!

124 எல்லாவற்றையும் எல்லா விதத்திலும் எல்லா சமயங்களிலும் மாற்றி ரசிப்பவனே, ஆண்டவனை உணர்ந்தவன்.

125 எதையும் வெறுக்கக் கூடாது, மறுக்கக் கூடாது. அப்படியே அனுபவிக்க வேண்டும்.

126 என்னைப் புகழ்வதைக் கண்டு நான் ரசிப்பேன். என்னை இகழ்வதைக்கண்டு நான் சிந்திப்பேன்.

127 எந்தப் பணக்காரனும் மனிதனை நம்பிக் கடன் கொடுப்பதில்லை. மண்ணை நம்பியே தருகிறான். ஆனால் அந்த மண் இறைவனுடையது.

128 சும்மா யிருப்பதே சுகம். சும்மா யிருப்பதே கடவுள்.

129 சூன்யமே சுகம்; சூன்யமே கடவுள்.

130 மனிதன் ஓடி ஆடி வேலை செய்து கொண்டிருந் தாலும் சாகிறான். அசைவற்றுச் சும்மா அல்லது சோம் பேறியாய் இருந்தாலும் சாகிறான். ஓடியாடிப் பாடியே சாவது நல்லது!

131 சிந்தனை யின்றிச் சும்மாயிருக்கப் பயில வேண்டும்.

132 சும்மாயிருக்க முடியாது. ஆனால், 'சும்மா இரு' என்றால் நீ ஒன்றும் அலட்டிக் கொள்ள வேண்டாம். சும்மாயிருக்க விடாமல் நீ தூண்டப்படுவாய். அதற்கு ஏற்ப வேலை செய்து கொண்டிருப்பதுதான் நலம்.

133 5. 1. 73 இரவு அதிகாலைக் கனவில், 'கோதாம் பிகே' என ஒரு பிராமணர் எனக்கு உபதேசித்தார்.

134 மனிதன் கடவுளை நம்புவது எளிதல்ல.

135 சும்மாயிருக்கப் பழகினால் சும்மாயிருக்கும் சகசநிலை வந்து போகும்.

136 சும்மா இருக்கும் சகசநிலையை உணர்ந்தால் அதுவே பூரணயோகம்.

137 மனிதன் உடல் இன்பத்திற்கு நிறையச் செலவு செய்கிறான். மன அமைதிக்கு — மன இன்பத்திற்குச் செலவு செய்வதில்லை.

138 துறந்தவன், இறந்தவனே.

139 வாசனைகள் குறையக் குறைய ஈசனை நெருங்கலாம்.

140 வாய்ப்பிருக்கும் போதெல்லாம் சும்மா இருந்து பழகு.

141 நான் ஒழிய வேண்டும். இல்லையேல் எல்லாம் நானாக வேண்டும்.

142 This is not a note book. But it is my thought book.

143 மனிதனுக்கு உள்ளது, தோன்றுவது — எல்லாம், அண்ட பிண்டங்கள் யாவும், வெட்ட வெளிக்குள்ளேதான்.

144 எல்லாமுண்டு என்பதும் எல்லாம் என்பதும் ஒன்றிமில்லாமையால் ஒடுங்குகிறது.

145 உள்ளவையைவிட அல்லவையே பேரண்டம்.

146 பிறப்பவை இறப்பவையே. இறப்பவையே பிறக்கின்றன என்பது நமக்குத் தெரியாது.

147 இல்லையென்ற சொல் எப்படி வந்தது? எல்லாம் இருப்பவையே! இல்லை என்பதே மாயை, பொய்.

148 சூன்யத்திலிருந்து சூட்சமத்திற்கு, உலகியலுக்கு வருவது சிரமமாக உள்ளது.

149 உலகியலிலிருந்து சூன்யத்திற்குப் போவதை நினைப்பதே சிரமம். அதிலும் போவது மிகவும் சிரமம்.

150 குழப்பங்கள் எதுவும் வெளியில் இல்லை. மனிதன் மனதில்தான்.

151 ரகசியம் என்பது ஒருவருக்கு மட்டும். பேரண்ட ரகசியம் அறிபவர் ஒருவர். அலை யாரிடமும் சொல்ல

முடிவதில்லை. சொல்வதில்லை. இதையே கண்டவர் விண்டிலர் என்றனர்.

152 பேரண்ட இயக்க இரகசியம்தான் இரகசியம்; வேறெதுவும் இரகசியமாகாது.

153 வாழ்க்கை என்பது வாழ்ந்த காலங்களே. வாழப் போவது அல்ல.

154 மனிதனின் உள்ளத்தில்தான் அவனுக்குத் தீயதும் நல்லதும் அமைந்திருக்கிறது. வெளியில் ஏதும் இவனுக்கு இல்லை.

155 பயம், விரோதி, கோபம், காமம் அனைத்தும் இவனது உள்ளத்தால், எண்ணத்தால்தான்.

156 உள்ளதை உள்ளத்தால், உள்ளபடி உணர்ந்தால் உயரலாம்.

157 மனிதனின் எண்ணங்களே அவன் வாழ்வு. எண்ணங்களின் நிறைவேற்றம், ஆழத்தைப் பொறுத்தது.

158 எல்லோரும் எல்லாவற்றையும் எண்ணலாம். அது நடைபெறுவதைப் பொறுத்தே அவர்களின் எண்ண வலிமைகளைக் கணக்கிட இயலும்.

159 தான் கட்டிய மாளிகை போன்ற வீட்டில் அவன் இறந்ததும் 'தூக்கு! தூக்கு!' என்று கூறுவார்கள். ஆனால், பொது சுடுகாட்டில் 'வை! வை!' என்றே கூறுவர். சொந்தம் சுடுகாடே!

160 நாம் ஊர்ப்பயணம் செய்கையில் நமது அழுக்கு உடைகளைச் சுமக்கிறோம். வீட்டை அடைந்து அவை களை இறக்குகிறோம். அதேபோல் நாம் பாபச் சுமை களை வீடு சென்றே இறக்க வேண்டும். வீடு பெறுவோம்; சுமையை அகற்றுவோம்.

161 'நான்தான்' என்ற நிலை வந்ததும் மனிதன் தாழ்ந்து விடுவான். அதாவது 'நான்' என்கிற மமதை 'தான்' என்று ஆகிறபோது.

162 சிற்றின்பமும், பேரின்பமும் நம்முள்ளே தான் இருக்கிறது; வெளியில் தேடி அலைவது வீண் அறியாமை.

163 சொத்து, சுகத்திற்கே யன்றித் துன்பத்திற் கில்லை. சொத்தால் துன்பம் என்றால், அதை, உடனே இழந்துவிடலாம்.

164 எண்ணங்கள்படி வாழ்க்கை. எண்ணங்கள் அனைவருக்கும் சமம் அல்ல. எண்ணத்தைத் தூண்டுவது எது?

165 உயிரை மனிதன் காப்பாற்றுகிறானா? உயிர் மனிதனைக் காப்பாற்றுகிறதா? மனிதன் உயிரைக் காப்பாற்றுவதாக நினைப்பது பிரம்மை.

166 உடல் இருப்பதால் உயிர் இல்லை. உயிர் இருப்பதால்தான் உடல் உள்ளது. உயிர் போன பின்னர் தான் உடல் போகிறது. உடல் அல்ல உயிர்; உன் உயிர் இயங்குமிடம்தான்.

167 பொன்னை விற்று மண்ணை வாங்குகிறான். மண்ணை விற்றுப் பொன்னை வாங்குகிறான். இரண்டை யும் விற்றுப் பெண்ணை வாங்குகிறான். பெண்ணை விற்று இரண்டையும் வாங்குகிறான். அனைத்துமே மண்தான்! ஒன்றேதான்!

168 மென்காற்றின் சுகமே சுகம்! மென்காற்றை இராமலிங்கனாரும் ரசித்துள்ளார். மென்காற்றின் மென் மையே இறைவன்!

169 மர்மஸ்தானம். உலக மர்மம் இதில் அடங்கி யுள்ளது.

170 மனிதனைப் பார்த்து மனிதன் நடந்துகொள்ளக் கூடியபடி, நல்வாழ்வு வாழ்பவனே மனிதன்.

171 வெட்ட வெளிக்குச் சென்றபின் அதற்கப்பால் ஏதாவது உண்டா? மனித அறிவு அதில் கலந்து விடுகிறதா? அதன் எல்லை அத்தோடுதானா? இவைகளை யாரறிவார்?

172 எல்லாம் இயற்கைதான். அந்த இயற்கையின் தன்மைதாம் நம் பார்வை, கற்பனை. ஒன்றுமே மனித அறிவுக்கு இன்னும் எட்டவில்லை!

173 எப்படி வந்தாலும் அழிகிறான். அவன் அழிந்தும் அவன் செய்கைகளும் அழிகின்றன. எப்படி வாழ்ந்தாலும் ஒன்றுதான். சிலர் பெயர்கள் சிலகாலம் பேசப் படுகின்றன. பின்னர் அவையும் அழியும். இதனால் வாழ்ந்து அழிந்தவனுக்கு என்ன பலன்?

174 வாழ்க்கை பயனற்றதும் நிலையற்றதும் தான். அவர் அவர் அனுபவிக்கும் நன்மை, தீமைகளும் மிகவும் சொற்ப கால நிகழ்ச்சியே. பெருமை, சிறுமைகளும் க்ஷணப் பொழுதே.

175 அறிவின் பூரண தன்மை அது அழிந்து போதலே. அறிவால் மனிதன் அழிகிறான். அறிவால் மனிதன் பூரணனாகிறான்.

176 மரங்கள் அதன் கடமையைச் செய்கின்றன. யாருக்கும் வளைவது இல்லை. வேண்டியவர், வேண்டாதவர் என்று பார்ப்பதில்லை. தனக்கு நன்மை செய்கிறவர், தீமை செய்கிறவர் என விருப்பு வெறுப்பு கொள்வதில்லை. ஆனால், மனிதன்? மனிதன் ஒருவனுக்குத்தான் இயற்கை நியதி இல்லை போலும்! இறப்பு, வாழ்வு, முதுமை, சாவு நீங்கலாக.

177 ஆகாய விமானத்தில் பயணம் செய்கிறவன் தான் இறந்து விடுவோம் என நினைக்கிறானா? இல்லை! வாழுபவனும் நினைப்பதில்லை.

178 காந்திஜியைவிட ஏசுமகான் சிரேஷ்டர். காந்தி அஹிம்சை, அன்பு, சத்தியம். ஏசு, 'அன்பே'.

179 இன்பம் வந்தால் துன்பம் வரும். துன்பம் வந்தால் இன்பம் வரும். இரண்டையும் நினையாமல் இருந்தால் இரண்டும் இல்லை. இதுவே சமநிலை.

180 லௌகீகத்தில் Nonsence கேவலம். அத்மார்த் தீகத்தில் மேலான நிலை. End of Philosophy.

181 சிந்தனை, அதன் முடிவு அமைதி. அதன் எல்லை, வெட்டவெளி அதன் முடிவு, பாழ். வாழ்வது பாழா வதற்கே!

182 அழியப் போகும் உடம்பை மனிதன் எவ்வளவு சிரமப்பட்டு அழியாமல் இருக்கப் பார்த்துக் கொள் கிறான்!

183 வாழ்வது சாவின் நடுவில்தான்.

184 தன்னில் இருக்கின்ற உயிரை நேசிக்கின்றான். 'அனைத்திலும் உள்ள உயிர் ஒன்று' என்று நினைத்து அனைத்தையும் நேசிக்க மறக்கின்றான், சிலர் மறுக்கின் றார்.

185 இயற்கைச் சிருஷ்டியின் ரகசியத்தைக் காண்பது முடியாது. ஓரளவு முயன்று முடித்துக் கொள்கிறான். இல்லையேல், பைத்தியமாவான்.

186 இயற்கை இரகசியத்தை அறியாமல், ஒருவன் ஒழுங்காக வாழ்ந்தால் போதும்.

187 நான் சாகச் சங்கடப்படவில்லை. ஆனால், சங்கடப்பட்டுச் சாவதை விரும்பவில்லை.

188 "நோயே, சற்றுக் குறைந்து போ! அறவே என்னை விட்டகலு!" என நோயையே வேண்டுவேன். நோய்க்கு மருந்து இறை. நோயும் இறையே.

189 எனக்கு 54ஆவது வயது (1978). இந்தவேளையில் நான் ஒவ்வொரு ஆண்டும் வளர்ச்சி பெற்றே வருகிறதாக நினைக்கிறேன். ஆண்டவன் அமைப்புக்கு நன்றி. என் உடல்நலக் குறைவையும், அது, சிறுகச்சிறுக அதிகப்படுத்து வதையும் அவன் விருப்பத்தையும் அறிந்து மகிழ்கிறேன். எனக்குத் தொல்லைதான்!

190 தனிமையில் குடும்பமின்றி வாழ்கிறான் ஒருவன். வயதாகியும் சிரமப்பட்டு வாழ்கிறான். 'வாழ்க்கை முடியப் போகிறது' என்று மனத்தை அடக்கிச் சும்மா இருப்பதில்லை. இயற்கை, படுக்க வைத்தால்தான் படுக்கிறான்!

191 "இட்ட பிச்சை எல்லாம் நாய்போல் தின்று சேய்போல் இருப்பர் கண்டீர். சுத்த ஞானம் கண்டார்.'! என் தந்தை அடிக்கடி கூறுவார்.

192 மரத்தால், மண்ணால், இரும்பால், பல பொருள்களால் பல ஆயிரம் பொருள்கள் உண்டாக்கப் படுகின்றன. அவை ஒவ்வொன்றிற்கும், மூலம் ஒவ்வொரு பொருள்களே. அப்படியே மனிதன் ஒரு பொருள். பல ஜீவராசிகட்கும் மூலம், ஒரு பொருள். இவை அனைத்துக்கும் பூமி மூலப்பொருள். இந்தப் பூமிக்குச் சூரியன் மூலப் பொருள். சூரியனுக்கு நட்சத்திரங்கள். அவைகட்கு மூலப்பொருள்? ஐயையோ! இது எட்டாத இடம். அனைத்திற்கும் 'ஆதிமூலம்' எதுவோ, அதுவே இறை!

193 வாழ்க்கை இன்றோடு முடிந்து விடுவதில்லை. ஆனால் வாழ்க்கை நிலையானதும் இல்லை. இரண்டையும் கருத்தில் கொண்டு வாழ்வதே வாழ்க்கை.

194 பிறப்பும், இறப்பும் சமம். ஆனால், இடையில், வாழ்வதில்தான் எத்தனை எத்தனையோ வேறுபாடுகள்.

195 மனிதன், அமைதிக்காகவே காட்டிற்கும், மலைக்கும் ஓடுகிறான். அங்கு அமைதியாக இருக்கிறது. ஓடுகிறவன், அதில் லயித்தால் நல்லதே. இதைவிட மனித கூட்டத்தில் இருந்து கொண்டே, அதிகாலையும், இரவும் போல் இருக்கப் பழகியவன், இருப்பவன்தான் ஞானி.

196 நடப்பவைகள் அனைத்தும் முன்பே இயற்கை திட்டமிடப்பட்டவையே. இதை உணர வாழ்க்கையில் அமைதியான ஆராய்ச்சி தேவைப்படுகிறது,

197 ஊர்ப்பயணம் பலவித வாகனங்களில் செய்கிறோம். அதில் உள்ள டிரைவர்களையே நம்புகிறோம். ஆனால், வாழ்க்கை வாகனத்தின் டிரைவரை— இறைவனை — நாம் நம்புவதில்லை!

198 ஏ! டாக்டரே, நீ உயிரைக் காப்பாற்ற முயல்கிறாய். வெற்றி பெற்றால் உனது என நினைக்கிறாய். தோற்றால் இறைவனைக் கூறுகின்றாய். இரண்டும் இறைவன் அருளே!

199 ஒரு சாமானிய மனிதன்தோல்வியுற்றால் மீண்டும் முயல்கிறான். ஒரு அறிவாளி தோல்வியுற்றால் ஞானம் அடைகிறான். ஞானியாகிறான்!

200 அக்பர் கோட்டையும், தாஜ்மகாலும் தனி மனித எண்ணமும் செயலும். அது பல ஆயிரம் மக்களால் சில நூறு ஆண்டுகள் பார்க்கப்பட்டு வியக்கப்படுகிறது.

201 மாயை என்பது, விஷயம் அறிந்தும், தீமை, உபயோகமில்லை!' எனப் புரிந்தும், மீண்டும் அதில் ஈடுபடுதல்தான்.

202 எனக்கென்ன கதி? சூரிய, சந்திரன் எப்படி ஒரு கதியில் இயங்குகிறதோ, அதே போன்று அனைத்திற்கும் கதி உண்டு!

203 அனைத்தையும் மறந்து கொண்டே வா. கடைசியில் உன்னையே மறந்துவிடு. இதுவே முடிவு.

204 மகான்களுக்கும், மகரிஷிகளுக்கும் தங்கள் மன, உடல் நலங்களைக் கவனிப்பது முதல் வேலை. பின்னர், இறைவனைச் சிந்திக்கின்றனர். அதனால், உடல் நலமாக உள்ளார்கள்.

205 21. 1. 1981 காலை நீண்டநேரம் பல நிமிஷங்கள் சும்மா இருந்தேன். அந்தச் சுகத்தில் இருந்து விடுபட முடியவில்லை, பலவந்தமாக விடுவித்துக் கொண்டேன். பல நாள்கள் இருந்துள்ளேன். இப்படி நீண்ட நாழிகை விடுபட முடியாமல் இருந்தது முதல் அனுபவம்.

206 முகமதியர்கள் இறைவனைத் துதிக்கையில் காதை அடைத்துக் கொண்டு பாடுவது நல்லதே. வேறு சத்தங்கள் காதில் பட வாய்ப்பில்லை, இறைவழி பாட்டைத் தவிர.

207 ஒரு பெருவியாதியஸ்தர், கால்விரல்கள் அழுகி யிருப்பதால், “கணுக்கால் வரை வெட்டி விடுங்கள்”. என்கின்றார். மனிதன் வாழ நினைக்கிறான். கால்கள் குறைந்தாலும்! எந்த அளவு குறையும் வரை அப்படி நினைப்பானோ?

208 7. 7. 81 இறைவனுடன் கலந்தேன்.

209 8. 7. 81 முதல் சும்மா இருக்க முயன்றேன்.

210 11. 7. 81 ஜிப்மர் மருத்துவமனை எனக்குச் சும்மா இருக்க மிகவும் உதவியாக இருக்கிறது. அமைதிச் சூழ்நிலை இன்று காளி என் வயிற்றிலும், மார்பிலும் அங்கமெல்லாம் களிநடனம் ஆடினாள்!

211 எல்லாம் ஒன்று என்பது சரி இல்லை. இருப்பது உண்மையில் ஒன்றேதான்.

212 பேரின்பம் என்பது, இன்பம் அனுபவிப்பவனுக்கு விளங்கவே கூறப்பட்டதாகும். அது, ஒன்றுமில்லாததே என்பதைப் புரிந்து கொள்வதே மனிதன் சாதித்த முடிவான நிலை.

213 உருவ வழிபாடு. பின்னர், அதன் பரிணாமம் அருவ வழிபாடு. அதன் முடிவு அருவமும் அற்றுபோதல். அதாவது, எதையும் நினையாத நினைவு அற்ற நிலை.

214 மனிதன், காலைக் கடன்களை முடித்து இறைவனை வழிபட்டோ, வழிபடாமலோ உணவுக்குக் காத்திருப்பதைப்போல், மரணத்திற்கும், தன்னை மறப்பதற்கும் தயாராய் இருக்க வேண்டும்.

215 மனிதன், நீண்ட நேரம், முடிந்தால் வாழ்வில் பெரும் பகுதி, மேலான நிலையில் இருந்தால், கொஞ்ச கால உலகநிலை அவனை உலகியலில் ஈர்க்காமல் உயர் நிலையிலேயே வைக்கும்.

216 சும்மா இருக்கும் சமயம் மிக மெல்லிய சப்தங்கள் கூடத் துல்லியமான மௌனத்தைக் கலைக்கும். கலக்கும்! எனவே தான், துறவிகள் மலைக் குகைகளில் போக மோன நிலையில் இருந்தார்கள்.

217 மனிதன், "பாழாய்ப் போ!" எனத் திட்டுகிறான். புரியாதவன், கவலைப்படுகிறான்! ஞானி, பாழ் ஆவதற்கே முயல்கிறான். அதனால்தான், திட்டுதலுக்கும் ஞானி கோபப்படுவதில்லை.

218 சூன்யத்தில் இருப்பவனை மந்திரவாதியின் சூன்யம் என் செய்யும்?

219 முக்தி நெறி அறிந்தபின் பக்தி நெறி தேவையா?

220 17. 12. 81 காலை 4முதல் 6மணி வரை இறையுடன் திளைத்தேன்! என் உள்ளத்தில், அருள் புகுந்த உணர்வு பெற்றேன்!

321 ஒரு பஸ்ஸில் உள்ள டிரைவர், கண்டக்டர், ஒரு சாதாரண ஆளுக்குத் தெரிந்தவன் என்றால் சிறு தூர பயணம் வரை அவனுக்கு ஒரு பெருமிதம். அதேபோல் போலீஸ் ஸ்டேஷனில் ஒரு காவலர், ஏட்டு, தெரிந்தவர் என்றால்'அவனுக்கு எவ்வளவோ மகிழ்ச்சி. இப்படியே பெரிய அதிகாரிகளே, தனவந்தர்கள், மந்திரிகள் என்றால் இன்னும் பெருமை! ஆனந்தம்! ஆங்காரம்!

222 ஒரு சாமான்யனுக்குக் கடவுள் நம்பிக்கையும், அவன் தொடர்பையும், அவன் இயல்பையும் அறிந்தவனுக்கு ஏன், மிக்க ஆர்வமும், ஆனந்தமும், இருமாப்பும் இருக்கக்கூடாது? இருக்கணும்! இருப்பது நியாயமே!

223 வயதானாலும் பதவி, மற்ற ஆசைகள் மனிதனை விடுவதில்லை. உடல் அனுபவிக்க முடியாத தள்ளாமையை அடைந்து விட்டதைப் பல உயிர்கள் உணர்வதில்லை. சில உயிர்கள் நினைக்கின்றன. அவை அமைதியாய் இருக்கின்றன. ஏழைகளின் கவலைகள் சற்றுக் குறைவானதே. பணக்காரர்களின கவலைகள் சற்றுக் கனமானதே, பாரமும் கூடுதலானதே.

224 காலம் தான் கடவுள்; காலம் செய்வது தான், கடவுள் செய்வது. 'ஈமான்' குர் ஆன் நம்பிக்கை. அதுவே தான் நன் நம்பிக்கை. நான் இடர்ப்படடேன். என்னை அன்னை காப்பாள்!

225. நான் அற்ற நான் தான் = தான்
தான் அற்ற தான் தான் = அது
அது, இது அற்றது = எது
எது, ஏது எல்லாம் அற்றதும்
கற்றதும் அழிந்துவிட
உற்றதே வீடு, விடு.

